


உளன்கண்டாய் நன்னெஞ்சே உத்தம னென்றும்
உளன்கண்டாய் உள்ளுவாருள்ளத் துளன்கண்டாய்
விண்ணோடுங்கக் கோடுயரும் வீங்கருவி வேங்கடத்தான்
மண்ணொடுங்கத் தானளந்தமன்

--(மூன்றும் திருவந்தாதி-40)

எனக்குப் பாங்கான மனமே! மேலுலகங்களெல்லாம் ஒரு மூலையில் ஒதுங்கும்படி சிகரங்கள் உயர்ந்தோங்கியிருக்கப் பெற்றதும் நிறைந்த அருவிகளை உடையதுமான திருமலையில் எழுந்தருளியிருப்பவனும் பூமிப்பரப்பெல்லாம் திருவடியின் ஒரு பாகத்திலே 'ஒடுங்கிப் போம்படி தான் அளந்து கொண்டவனுமான ஸ்வாமியானவன் நம்மைக் காப்பதனாலே ஸத்தைப் பெற்றிருப்பவன்' காண்; புருஷோத்தமனான அப்பெருமான் எக்காலத்திலும் நம்மை ரக்ஷிப்பதிலே தீக்ஷை கொண்டு இருக்கிறான் காண்; ஆஸ்திகர்களுடைய மனத்திலே நித்யவாயம் பண்ணுபவன் காண்!

# ஸப்தகிரி

செப்டம்பர்-1991

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 22

வருடச்சந்தா ரூ. 12 — இதழ் 4.


## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீவிநாயகர் --சித்திரம்: கே. ஜெகதீஷ

பின்னட்டை : நவராத்திரி பிரம்மோத்ஸவ உத்சவ விவரங்கள் ·திருமலை.

உள்ளட்டை 2-வது, 3-வதில் : கோதாவரி புஷ்கரத்தின் போது


சிறப்பாசிரியர் :

திரு. எம்.வி.எஸ். பிரஸாத், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri
T.T.D., Tirupati.

# உங்களுடன்...

எட்டடுக்கு மாளிகைவாசி முதல், ஏழ்மையில் வாடிடும் மண்குடிசைவாசி வரை, வாழ்க்கையின் எல்லா நிலையினரும் பொதுவாக பிரச்சனைகளோடு எழுந்து, பிரச்சனைகளோடு போரிட்டுக்கொண்டு பிரச்சனைகளோடு படுக்கின்றனர். அமைதி எனும் சொல்லை அவர்களது வாழ்க்கை அகராதியில் காண்பது கடினம். வானில் பறப்பவனைக்கண்டு உந்துவண்டியில் செல்பவனும், உந்துவண்டியில் வருபவனைக் கண்டு மிதிவண்டியில் வருபவனும், மிதிவண்டியில் செல்பவனைக் கண்டு பாதசாரியும் ஏக்கப்பெருமூச்சுக்களை விட்டுக்கொண்டிருக்கின்றனர். இவ்வகை ஏக்கங்களையே தங்களது வாழ்க்கைப் புத்தகத்தின் பக்கங்களாகக் கொண்டு விளங்கிடும்போது அவனது வாழ்வில் அமைதி என்பது கானல் நீராகத்தான் அமையும். உண்பதும், பொருளீட்டுவதும், குடும்பமும் எதற்கு என்பதைச் சற்றே சிந்தித்துப் பார்த்தால் அமைதியின் பொருள் விளங்கும். பிரச்சனைகள் தீர வழியமைய வேண்டுமானால், மனமும், சூழ்நிலையும் அமைதியுடன் விளங்குதல் அவசியம்.

அமைதியினை அவன் வீடு வழங்கிடாத போது, மனிதனுக்கு ஒரே புகலிடமாக விளங்குவன அவன் நம்பிக்கையுடன் சென்றிடும் ஆலயங்கள்தாம். அவ்வாலயங்கள் அவன் பிரச்சனைகளுக்குத் தீர்வு தாரா. ஆனால் பிரச்சனைகளைப் பற்றி நன்கு சிந்தித்து, ஏற்ற முடிவுகளை எடுத்திடும் வகையில் அவனுள் நம்பிக்கையினையும், மனயமைதியினையும் தருவன ஆலயங்கள்தாம். வெளியில் திகழும் சூழ்நிலை அமைதியுடனும், மகிழ்ச்சியுடனும் விளங்கிடும் போது, அவனுள்ளம் தெளிவாகின்றது. ஆகையினால்தான் மனிதன் நான்கு பேருடன் சேர்ந்து வாழும் சமூகச் சூழ்நிலையினை ஏற்படுத்திக்கொண்டு, மிருகங்களுடன் தன்னை வேறுபடுத்திக் கொண்டான். அவ்வாறு ஒரு வீட்டில் பலர் கூடிடும் ஒரு சூழ்நிலையை திருமணம் போன்ற குடும்ப நிகழ்ச்சிகள், பண்டிகைகள் ஏற்படுத்திக்கொடுக்கின்றன. ஆனால், வளர்ந்து வரும் மக்கள் பெருக்கமும், பொருளாதார நெருக்கடியும் அத்தகு நிகழ்ச்சிகளே அவனுக்கு பிரச்சனைகளாக விளங்கிடும் போது, அமைதி அவனுக்கு ஒரு எட்டாக்கனிதான்.

இவற்றையெல்லாம் கருதிதான் என்னவோ, ஆன்றோர் ஊரினுள்ளும், வெளியேயும் பெரிய பெரிய பிராகாரங்களைக் கொண்ட கோயில்களை எழுப்பினர் போலும். அங்கு ஆயிரக்கணக்கான மக்கள் ஒரே சமயத்து கூடிடும் வகையில், அக்கோயிலுக்குள் விழாக்கள் கொண்டாட வழி அமைத்தனர். தனி ஒருவன் செலவில் ஒரு பண்டிகையைப் பெருமளவில் கொண்டாடுவதைவிட தன் பங்காக சிறிதே பொருள் தந்து, ஊர் மக்களுடன் தோளோடு தோள் சேர்ந்து பொதுஇடமான ஆலயங்களில் சுயநலம், பகை, வெறுப்பு, பொறாமை போன்ற உணர்வுகளிலிருந்து ஒரு சில மணி நேரங்களாவது தங்களை விடுவித்துக்கொண்டு ஆன்மீகச் சூழ்நிலையில் சமய ஈடுபாட்டுடன் மகிழ்ச்சியின் பின்னணியில் அமைதியினை அநுபவிப்பதே ஓர் புது அனுபவமாகக் கொண்டான். இதனால் பொதுநலம், அன்பு, தொண்டு போன்றவற்றின் பெருமையினை உணரவே செய்தான்.

தன்னூரிலேயே அமைந்திடும் ஒரு கோயில் விழாவிலேயே அவன் இத்தகு மகிழ்ச்சியினை அடைந்திடும் போது இடம், மொழி கடந்த வேறொரு ஊரில் அமைந்திடும் கோயில் விழாவில், பலவகையான கலாசாரக் கூறுகளைக் கொண்டு திகழ்ந்திடும் ஆயிரக்கணக்கான மக்கட் கடலில் தன்னையும் சங்கமித்துக் கொண்டு, தான் வழிபடும் கடவுளை வணங்கி

(48-ம் பக்கம் பார்க்க)

# ஸப்தகிரி


செப்டம்பர்-1991

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 22

வருடச்சந்தா ரூ. 12 — இதழ் 4.


## உள்ளுறை

பக்கம்



### அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை . ஸ்ரீவிநாயகர் --சித்திரம்: கே. ஜெகதீஷ்

பின்னட்டை . நவராத்திரி பிரம்மோத்ஸவ உத்சவ விவரங்கள் -திருமலை.

உள்ளட்டை கோதாவரி புஷ்கரத்தின் போது
2-வது, 3-வதில் :


சிறப்பாசிரியர் :
திரு. எம்.வி.எஸ். பிரஸாத், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

வழியில் அவ்வுருவத்தை கீழே இறக்கலாகாது என்ற நிபந்தனையை இராமர் விதித்திருந்தார். வழியில் அந்தணச் சிறுவன் வடிவில் தோன்றிய விநாயகரிடம் அரங்கநாதரின் திருவுருவத்தைச் சிறிது நேரம் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு வீடணன் உட்பட்டார். சிறிது நேரத்தில் அவ்வுருவத்தைப் பூமியில் நிறுத்திவிட்டு அந்தணச் சிறுவன் சென்றுவிட்டார். விக்கிரகத்தைப் பூமியிலிருந்து எடுக்க வீடணனால் இயலவில்லை. வீடணன் அந்தணச் சிறுவனைத் துரத்திச் சென்று அவனது தலையில் குட்டிய போது விநாயகர் அங்கு காட்சியளித்து அருளினாராம். இவரே இக்கோயிலில் அருளாட்சி நடத்துகிறார்.

### கற்பகநாதன்குளம் கற்பகநாதசுவாமி திருக்கோயில்

முத்துப்பேட்டை வேதாரண்யம் நெடுஞ்சாலையில் அமைந்துள்ள திருக்கடிக்குளம் என்ற பாடல் பெற்ற சிவத்தலம் இன்று கற்பகநாதன் குளம் என்று வழங்கப்படுகிறது. இச்சிவாலயத்தின் தென்மேற்குப் பாரிசத்திலுள்ள தனிக்கோயிலில் கற்பகவிநாயகர் அமர்ந்துள்ளார். கற்பகமாகிய சிவபெருமானிடமிருந்து ஞானக்கனியைப் போட்டியில் வென்றவர் இவரே என்று தலபுராணம் இயம்புகிறது.

### திருச்செங்காட்டங்குடி வாதாபி கணபதி

திருவாரூர் திருமருகல் பேருந்துப் பாதையில் அமைந்துள்ள திருச்செங்காட்டங்குடி என்ற பாடல் பெற்ற சிவத்தலத்தில் உத்தராபதீஸ்வரர் திருக்கோயில் அமைந்துள்ளது. மாகதன் என்ற தவசிக்கும், விபுதை என்ற அவுணப்பெண்ணிற்கும் யானை முகத்துடன் கூடிய கஜாசுரன் என்ற அரக்கன் பிறந்தான். கஜமுகன் சிவபெருமானைக் குறித்துக் கடுந்தவம் புரிந்து அரிய வரங்கள் பலவற்றைப் பெற்றான். விசித்திரகாந்தி என்ற மங்கையை மணந்த பின் மதங்கபுரம் என்ற நகரத்திலிருந்து அரசாட்சி புரிந்த கஜாசுரன் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் கடும் இன்னல்களை அளித்து வந்தான். கஜாசுரன் பெற்ற வரங்களின் மேன்மையை உணர்ந்த சிவபெருமான் அவனை ஒடுக்க யானை முகத்துடன் கூடிய புத்திரனை உருவாக்கினார். கடுமையான போருக்குப்பின்



னர் தனது வலது கொம்பை முறித்து அசுரன் மீது எறிந்து அவனை விநாயகர் ஒடுக்கினார். தான் பெற்ற வரத்தின் மேன்மையால் கஜாசுரன் பெருச்சாளி வடிவம் கொண்டு விநாயகருடன் மோத முயற்சித்தான். அவனை அடக்கித் தனது வாகனமாக விநாயகர் ஏற்றுக்கொண்டார். கஜமுகாசுரனைக் கொம்பால் பிளந்த போது பெருகிய உதிரம் ஆறு போல் பெருகி ஓடியதால் இத்தலம் திருச்செங்கோட்டங்குடி என்று பெயர் பெற்றது. அசுரனை வதைத்த பழிநீங்கும் பொருட்டு விநாயகர் சிவலிங்கத்தை இங்கு பிரதிஷ்டை செய்து பூசித்தார். இக்காட்சியை ஆலயத்தில் சுதைச் சிற்பமாகக் காணலாம். கணபதி ஈசுவரனை இங்கு பூசித்தார். இப்பதி கணபதீச்சுரம் என்ற பெயரையும் பெற்றது. ஆண்டு தோறும் மார்கழி மாதத்தில் பூர்வபட்சம் சதயமும், சஷ்டியும் கூடிய நாளில இச்சம்பவம் இக்கோயிலில் நினைவுறுத்தப் படுகிறது.

இத்திருத்தலத்தில் மாமாத்திரர் குலத்திலுதித்த பரஞ்சோதி என்பவர் பல்லவன் இரண்டாம் நரசிம்மவர்மனின் தானைத் தலைவனாகப் பணியாற்றினார். கி.பி 642-ம் ஆண்டில் மேலைச்சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசியுடன் நடைபெற்ற போரில் வாகை சூடி அவர்களது தலைநகரான வாதாபியைப் பல்லவர்கள் தீக்கிரையாக்கினர். பரஞ்சோதி வாதாபியிலிருந்து அற்புதமான விநாயகரின் படிமத்தைக் கொணர்ந்து அதனைத்



**கணபதி ஈசனை பூசித்தல்.**

திருச்செங்கோட்டங்குடியில் பிரதிஷ்டை செய்தார். பின்னர் அரசியல் வாழ்வைத் துறந்து சைவ சமய வாழ்வில் ஈடுபட்டுச் சிறுத்தொண்ட நாயனார் என்ற பெயருடன் புகழ்பெற்று விளங்கினார். பரஞ்சோதி பிரதிஷ்டை செய்த வாதாபி கணபதியே இக்கோயிலில் சிறப்பு மூர்த்தியாக அருளாட்சி புரிகிறூர்.

"சூதாவி நிலநிகர் முலைவிழி வல்லபை-
யணைந்த தொண்டர் செய்தி
ஓதாமுன் பொன்னிநதி கொணர்ந்து
சிவன்பாதத்தை உன்னிச்சூழ்ந்து
தீதாவி செவிகவருந் தீங்குழலோன்
விழியளித்துச் செல்வ நல்கும்
வாதாபி மதக்களிற்றின் பதயுகத்
தாமரை புளத்தில் வைத்து வாழ்வாம்.

(தலபுராணம்)

### கேரளபுரம் நிறம் மாறும் விநாயகர்

கன்னியாகுமரி மாவட்டத்தில். தக்கலையிலிருந்து ஒரு கி.மீ. தொலைவிலுள்ள கேரளபுரம் என்ற சிற்றூரிலுள்ள மகாதேவர் கோயிலின் வெளிப் பிரகாரத்தில் ஒரு ஆலமரத்தடியில் விநாயகர் எழுந்தருளியுள்ளார். இவர் ஆண்டுதோறும் உத்தராயண பருவத்தில் (மாசி முதல் ஆடி வரையில்) வெண்மையான நிறத்துடனும், தட்சிணயன பருவத்தில் (ஆவணி முதல் ஆடி வரையில்) கருமையான நிறத்துடனும் காட்சியளிக்கிறூர். இவ்வுருவம் சந்திர காந்தம் என்ற கல்லால் உருவாக்கப்பட்டதாம். இதன் தன்மை விஞ்ஞானிகளுக்கு அப்பாற்பட்ட புதிராகவே உள்ளது.



இந்த விநாயகர் சிறந்த வரப்பிரசாதியாக விளங்குகிறூர். இவரது ஒரு கால் சிறிது ஊனமுற்றிருக்கிறது. இக்கோயிலில் பணிபுரிந்து வந்த அர்ச்சகர் பொதுமகளிடம் தொடர்பு கொண்டிருந்தபோது, அவரைத் திருத்த விநாயகர் முயற்சித்தார். வயோதிகர வடிவில் தோனறிய விநாயகரை அரச்சகர் காலில் தாக்கியதாகவும், பின்னர உண்மையை அறிந்து மன்னிப்புப் பெற்றதாகவும் ஒரு செவிவழிச்செய்தி வழக்கிலுள்ளது. இராமேசுவரத்திற்கு அருகே புதையுற்றிருந்த இத்திருவுருவத்தை ஒரு அரசன் தனது கனவில் விநாயகர் பணித்தவாறு கண்டெடுத்து ஆலயத்தில் பிரதிஷ்டை செய்தாராம். வெகு காலம் திறந்த வெளியில் வெய்யில், மழை ஆகியவற்றை தாங்கியவாறு இவ்வுருவம் இருந்தது. அண்மைக் காலத்தில் பக்தர்களுக்காக ஒரு மண்டபம் எழுப்பப்பட்டுள்ளது.

### சேண்பாக்கம் சுயம்பு விநாயகர்

வட ஆற்காடு மாவட்டத்தில் வேலூருக்கு இரண்டு கல் தொலைவிலுள்ள சேண்பாக்கம் என்ற சிற்றூரில் சுயம்புவாகத் தோன்றிய விநாயகர் கோயில் கொண்டுள்ளார். விநாயகருக்கு உரிய முழு உருவத்தைப் பெறுமல், உருண்டையான கல உருவிலேயே இவர் காட்சி அளிப்பது இக்கோயிலுக்குரிய சிறப்பான அம்சமாகும். இவரைச் சுற்றியுள்ள சில கற்களும் சில ஆண்டுகளாகப் பெரிதாக வளர்ந்து வருகின்றனவாம்.



பதினெட்டாம் நூற்றாண்டில் துகோஜிராவ் என்ற மராத்திய அமைசசர் ஆட்சிப்பொறுப்பைக் கவனிதது வந்தார். அப்போது கிராமமக்கள் முன் விநாயகர் ஒரு அந்தனச் சிறுவனாகத் தோன்றினார். வேலூரக் கோட்டையைச் செப்பனிடும் பொருட்டுக் கற்களை ஏற்றிச் சென்ற ஒரு மாட்டு வணடி தனது முதுகில் ஏறிக் காயப் படுத்திவிட்டதாக அவர் தெரிவித்தாராம். இது இறைவனின் திருவிளையாடலே என்பதையுணர்ந்த துக்கோஜிராவ் விநாயகர் தனது கனவில் காட்டிய இடத்தில் ஒரு சிறு ஆலயத்தை எழுப்பினார. இதுவே இக் கோயில் தோன்றிய வரலாறு. விநாயகரின் சந்நிதி அவரது விருப்பபபடியே திறந்த வெளியாக விடப்பட்டது. தேவர்களும், தவசிகளும் விண்ணிலிருந்தவாறு விநாயகரை வழிபடுவதால மண்டபத்தின் மேல் பகுதி திறநதே விடப்பட்டுள்ளதாம். இவ்வாலயத்தின் உட்பகுதிகளில் விநாயகரின் பல்வேறு உருவங்களைக் காணலாம்.

**உப்பூர் வெயிலுகந்த விநாயகர்**

இராமநாதபுரம் மாவட்டத்தில் தொண்டியிலிருந்து இராமநாதபுரம் வரை கடற்கரைச் சாலையிலுள்ள உப்பூர் என்ற திருத் தலத்தில் வெயிலுகந்த விநாயகர் கோயில் கொண்டுள்ளார். தட்சயாகத்தில் கலந்து கொண்ட தவறுக்காகப் பரிகாரம் தேடிய சூரியன் இங்கு வழி பட்டுப் பேறு பெற்ருன். ஆதவனின் ஒளிக்கதிர்கள் தன்திருமேனியில் படுமாறு அமர்ந்த விநாயகர் 'ஆதபேச்சா விநாயகர்' அல்லது 'வெயிலுகந்த விநாயகர்' என்ற பெயரை ஏற்ருர். இதற்கேற்ப யுகம் யுகமாகவே திறந்தவெளியிலேயே விநாயகர் அமர்ந்துள்ளார். இலங்கை நோக்கிப் படை எடுத்துச் செல்லுமுன்னர் இராமர் இங்கு விநாயகரை வழிபட்டாராம். விதர்ப்பநாட்டு மன்னனான பீமன் என்பான் புத்திரப்பேறு அளிக்குமாறு உப்பூரில் முறைப்படி வழிபட்டுக் காரியசித்தி பெற்ருன்.

மூலவர் நான்கடி உயரமுடைய கம்பீரமான மூர்த்தியாகக் கோயிலில் காட்சி அளிக்கிருர். அவரது திருமேனியில் வெயில் விழுமாறு மண்டபத்தின் உச்சியில் தளம் இல்லாத திறந்த வெளியை அமைத்துள்ளனர். இங்கு விநாயகசதுர்த்தி விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

சத்தோடு சித்தானந்த வடிவாய் நின்ற
தனிமுதலே போற்றியங் கடவே போற்றி
உத்தமர்களு ளத்துதித்த உளரே போற்றி
உப்பூர் வாழ் வெயிலுகந்த கணேசா போற்றி

(வெயிலுகந்த விநாயகர்பதிகம்-
சொர்ணநாதபுரம்
பழனியப்ப ஐயா

**திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார்**

தென்னாற்காடு மாவட்டத்தில் சிதம்பரம் - காட்டுமன்னார் குடி பாதையிலுள்ள திருநாரையூர் என்ற தலத்திலுள்ள சௌந்தரேஸ்வரர் கோயிலில் இடம் பெற்றுள்ள பொல்லாப்பிள்ளையார் சந்நிதி பிரசித்தி பெற்றது. உளியால் செதுக்கப்படாமல் தானாகவே சுயம்புவாகத் தோன்றியதால் பொள்ளாப்பிள்ளையார் என்ற பெயர் ஏற்பட்டது. இதுவே காலப்போக்கில் பொல்லாப் பிள்ளையார் என மாறிவிட்டது.



ஆதிசைவ மரபைச் சேர்ந்த அரச்சகர்கள் இப்பிள்ளையாருக்குப் பூசைகள் புரிவது உண்டு. ஒருமுறை அர்ச்சகர் வெளியே சென்றிருந்ததால் அவரது மகனான நம்பி என்ற சிறுவன் இப்பிள்ளையாருக்குப் பூசைகள் புரிந்தான். அளித்த நிவேதனத்தை இறைவன் ஏற்றுக் கொள்ளாததைக் கண்டு தனது வழிபாட்டில் குற்றம் இருக்குமோ என்று சிறுவன் அஞ்சினான். தனது தலையைக் கல்லில் மோதிக் கொள்ள எண்ணியபோது பொல்லாப்பிள்ளையார் காட்சியளித்து உணவை

உண்டார். இச்சிறுவனே நம்பி யாண்டார் நம்பி என்று புகழ் பெற்றார். சைவக் குரவர் அருளிய திருமுறைப் பாடல் களைத் தேடும் முயற்சியில் முதலாம் இராஜராஜ சோழன் ஈடுபட்டிருந்தபோது நம்பியாண் டார் நம்பி பொல்லாப்பிள்ளை யாரின் அருளால் அத்திருமு றைகள் உள்ள இடத்தைக் கண்டுபிடிக்க உதவினார். திரு முறைகளைப் பன்னிரண்டாகப் பாகுபாடு செய்தனர். இதத கைய பெருமைமிக்க பொல்லாப் பிள்ளையார் தன் சந்நிதியில் அருளாட்சி நடத்துகிறார்.

"மருப்பை யொருகைகொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பை யடியோற்றத் துணிந்தால் நெருப்பை
அருந்த வெண்ணுகின்ற எரும்பென்றே யவரை
வருத்த வெண்ணுகின்ற மலம்"

(நம்பியாணடார் நம்பி)

## திருவலஞ்சுழி சுவேத விநாயகர்

கும்பகோணம் தஞ்சை நெடுஞ்சாலையின் ஒரு புறத் தில் அமைந்துள்ள திருவலஞ் சுழி கபர்தீஸ்வரர் ஆலயம் அப பர், சம்பந்தர் ஆகியோ ரின் பதிகங்களைப் பெற்றுள் ளது. இக்கோயிலில் உள்ள வெள்ளை வாரண விநாயகர் (ஸ்வேத விநாயகர்) இந்திர னால் பிரதிஷ்டை செய் யப்பட்டவர். கடல் நுரை யால் இம்மூர்த்தி உருவாககப பட்டுள்ளதால இவருககுப் பச சைக் கற்பூரம் மட்டுமே அபி ஷேகம் செய்யப் பயனபடுத்தப் படுகிறது. ஆவணி விநாயக சதுர்த்தி இங்குச் சிறப்பு விழா வாகக் கொண்டாடப்படுகிறது.

தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைய முற்பட்டபோது ஆதி யில் விநாயகரை வணங்கி ஆசி பெற மறந்தனர். இதனால் நெடுநேரம் ஆகியபின்னரும் அமுதம் தோன்றவில்லை. தவ றையுணர்ந்த இந்திரன் கடல் நுரையால் ஒரு விநாயகர் உரு வத்தை அமைத்து வழிபட் டான். அதன் பின்னரே அமு தம் தோன்றியது. தான் உரு வாக்கிய விநாயகரைத தேவ லோகம் எடுத்துச் செல்ல இந் திரன் முயன்றான. அவ னால் விநாயகரைத் தூக்க இயலவில்லை. இந்திரன் இத் தலத்திலேயே விநாயகரைப் பிரதிஷ்டை செய்து ஆலய மெழுப்பிப் பெருவிழா நடத் தினான். இன்றும் இக் கோயிலில் பிரம்மோற்சவத்தின் ஒன்பதாம் நாளன்று இச்சம்ப வம் நினைவுகோரப்படுகிறது. திருவிடை மருதூரில் எழுந் தருளியுள்ள மகாலிங்கமூர்த்தி யின் பரிவாரமாக இவ்விநா யகர் திகழ்வதால், நவபரிவா ரதலங்களுள் திருவலஞ்சுழியும் இடம்பெற்றுள்ளது.

## மணக்குள விநாயகர் பாண்டிச்சேரி

புதுவை நகரிலுள்ள புகழ் பெற்ற பழமையான ஆலயங்க ளுள் மணக்குள விநாயகர் ஆல யமும் ஒன்று. இது கி.பி. 17-ம் நூற்றாண்டில் தோன்றியிருக் கலாம். இப்பகுதியில ஆட்சிபு ரிந்து வந்த பிரெஞ்சு நாட்டின் அரசியல் அதிகாரிகளின் தூண் டுதலால் விநாயகரின் விக்கி



ரகம் கடலில் எறியப்பட்டதாக வும் குறுகிய காலத்தில் விநா யகர் கரைக்கே திரும்பி வந் துவிட்டதால் ஆலயத்தில் மறு பசி பிரதிடை செய்யப்பட்டதா கவும் ஒரு செவி வழிச்செய்தி வழக்கிலுள்ளது. இச்சம்பவத் திற்குப் பின்னர் பிரெஞ்சு நாட் டினரும் இவ்விநாயகரை வழிப டத் துவங்கினர். இதனால் இவருக்கு வெள்ளைக்காரப் பிள் ளையார் என்ற பெயர் ஏற்பட் டது. இங்கு கவர்னராகப் பணி யாற்றிய பிரான்சுவா மர்த்தேன் என்பவர் இக்கோயிலில் வழி பாடுகளும், விழாக்களும் நடை பெறத் தடைவிதித்தாராம். இத னால் வெகுண்ட நெசவாளர் கள் ஊரைவிட்டு வெளியேறி னர். வர்த்தகம் பெரிதும் பாதிக கப்பட்டதால் கவரனர் தாம் விதித்த தடையை நீக்கினாராம்.

தூய்மையாக விளங்கும் இக் கோயிலில் ஏராளமான பக்தர் கள் வருகை புரிந்து இறைவ னின் அருளுக்குப் பாத்திரமாகி றார்கள். விநாயகரின் பல்வேறு திரு உருவங்கள் இக்கோயிலில சிற்பவடிவில் இடம் பெற்றுள்

என. மகாகவி பாரதியார், மகா வித்துவான் பெரிய சாமிப்பிள்ளை, கலவை சுப்ப ராய செட்டியார, மாணிககம் பிள்ளை, இரத்தினை பிளளை, சித்தானநத சுவாமி, அக்கா சுவாமி போனற புதுவை நகரப் புலவரகள் மணக்குள விநாய கரைப் போறறியுள்ளனர.

முன்பு இககோயிலுககருகே யுள்ள திருககுளம், கிணறு ஆகி யவறறில் நீர் என்றும வற்ருமல சுரந்துகொண்டே இருநததால இப்பகுதிக்கு மணக்குளம் எனற பெயர் ஏற்பட்டதாக ஆனந்தரங் கம் பிளளையவர்களின் குறிப்பு கூறுகிறது.

**கோவை**
**ஈச்சநாரி விநாயகர்**

கோவையிலிருந்து பொள் ளாச்சி செல்லும் நெடுஞ்சாலை யில் 9 கி.மீ. தொலை விலுள்ள ஈச்சநாரி கிராமத் திலுள்ள விநாயகர் ஆலயம அதிக பக்தர்களைக் கவர்நது



வருகிறது. பதினைந்தாம் நூற்ருணடில் பேரூரில் பிர திஷ்டை செய்வதற்காக மதுரை யிலிருநது இவவுருவம் எடுத துவரப்பெற்ற போது வண்டி யின் அச்சு முறிநது நிலத் தில விழுநதது. அவ்வுருவத் தைப் பூமியில் இருந்து எடுக்க முடியாமல் இங்கேயே கோயில் எழுபபினர். மூலவர் ஐந்து அடி உயரமும, மூனறு அடி பரு மனும் உள்ள அறபுதத திருஉ ருவத்துடன் காடசியளிக்கிருர். அணமைக் காலததில் இஙகு பல திருபபணிகள நடைபெற்று வருகின்றன. இங்குள்ள திரு மண மண்டபத்தில் அதிக அள வில் திருமணஙகள நடை பெறுகின்றன. நெடுஞ்சாலை வழியே ஊர்திகளில் செல்வோர் இக்கோவிலுக்கு முன்நின்று தேங்காய் உடைத்து வழிபடு வது வழக்கம்.

**சேலம் ராஜகணபதி**

சேலம நகரில் நடுநாயக மாக விளங்கும் தேர்வீதியி லுள்ள சிறு கோயிலில் அருள மழை பொழியும் ராஜகண பதியும் பக்தர்களின் நியாய மான விருப்பங்களை நிறை வேற்றி வருகிருர். இங்கு எப்போதும் பக்தர்கள் வெள் ளம் அலை மோதுகிறது. சேலம சுகவனேஸ்வரர் கோயி லில இணைக்கோயிலாக இக் கோயில விளஙகுகிறது.



இதுபோலவே தமிழகததின் பல பகுதிகளில் வேறு பல விநாயகரின் சந்நிதிகள் பக் தர்களின் பேராதரவைப் பெற்று அருள் கொழிக்கும் சந்நிதிகளாக விளஙகுகின்றன.

பாசத்தளை பறுத்துப் பாவக்
கடல் கலக்கி
நேசத்தவளைப் பட்டு நிற்குமே-
மாசற்ற
காரார் வரையீன்ற கன்னிப்
பிடியளித்த
ஓரானை வந்தெனுளத்து.
(குமரகுருபரரின் காசிக்கலம்பகம்)
(காபபுச் செயயுள்)

***

## உன்னிடமே இருக்கிருன்!

கடவுள் உன்னிடமே இருக்கிருன். மலரினுள்ளே மணம் போல், கஸ்தூரி மான் தன் நாபியில் கஸ்தூரி இருப்பதைத் தெரிந்துகொள்ளாமல், மேய்ச்சல் தரையைச் சுற்றி சுற்றி வரு வது போல ஏன் நடந்துகொள்கிருய்?

--கபீர்தாஸர்.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

# முருகன் நாமங்கள்

திரு. க. இராமலிங்கம் - புதுப்பேட்டை.

எதிலும் புதுமை புகுத்தும் காலம் இது. நவம் என்ருல் புதுமை. ப்ர என்பது சிறப்பு. ப்ரணவம் என்ருல் புதுமையின் சிறப்பு என்று பொருள். ப்ரண வப் பொருளானவன்தான் முரு கன். முருகன் அழகானவன். உகரம் சேர்ந்த சொல். 'உ' காக் கும் தொழில் புரிவது. காக்கும் தொழில் புரிபவனை 'கா வா! வா!' முருகா வா வா என்று அழைப்பதில் வியப்பென்ன.

"காக்கக் கடவிய நீ காவா திருந்தக்கால் ஆர்க்குப் பரமாம் ஆறுமுகவா" என்று பாடி உரு கினார் நக்கீரர்க்குப் பின்னர் வந்த புலவர் ஒருவர்.

'உ' எழுத்து காக்கும் என்ப தால்தான் புலவர்கள் புராணம் காவியம் ஆகியவற்றை இயற் றும்போது 'உ' எழுத்தை முத லில் வருமாறு 'உலகம் உவப்ப' என்று நக்கீரரும் (திருமுருகாற் றுப்படை) 'உலகெலாம்' என்று சேக்கிழார் பெரியபுராணத்தை யும் ஆரம்பிக்கிருர்கள். கம்ப ரும் 'உலகம் யாவையும் தாமு ளவாக்கலும்' என்றுதான் கம் பராமாயணத்தைத் தொடங்குகி ருர். அவ்வாறே மகர மெய்யில் 'உ'கர உயிர் மருவிட 'மு' என்ற எழுத்தில் 'முத்தைத்தரு' என்று அருணகிரிநாதர் திருப்பு கழை ஆரம்பிக்கிருர்.



ம ர க என்ற மெய்யெழுத் துக்களில் உகர உயிர் மருவி முருகு என்ற மந்திரம் உலகைக் காக்க எழுந்தது. இவ்வாறு மூன்று உகர உயிர்கள் அமைந்த வேறு மந்திரம் ஏதுமில்லை. மற்ற மந்திரங்களை பல லட்சம் முறைகள் செபித்தலால் வரும் பலன் 'முருகா' என்று ஒருமுறை செபித்தால் கிடைக்கும். அத னைத்தான் அருணகிரியார்,

"மெய்ம்மை குன்ரு மொழிககுத்
துனை முருகா எனும் நாமங்கள்"

என்ருர். நாமம் என்று கூரு மல் நாமங்கள் என்று கூறியது பல நாமங்களுக்கு ஈடானது என்ற பொருளில்தான்.

"முருகா எனஓர் தரமோ தடியார்
முடிமேல் இணை தாள் அருள்வோனே"

என்று ஒரு தரம் சொன் னாலே பலன்கிடைக்கும் என் கிருர் அருணகிரியார்.

காலன் என்ருல் அஞ்சா தவர் எவருமிலர். நாம் அவனை நினைத்தாலே அஞ்

சும்வாம். அவன் முகமும் அஞ்சத்தக்க முகம்தான். உயிர்கள் அனைத்தும் அஞ்சத்தகக முகமான இயமன் தோன்றினால் (அஞ்சு முகம் தோன்றில்) ஆறு முகம் தோன்றும். நமக்கும் இயமனுக்கும் சமர் ஏற்பட்டால் வேல் தோன்றும. எப்போது? 'முருகா' என்று ஓதுவார் முன்னால்தான்.

அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந்
தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென
வேல்தோன்றும்-நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலுந்
தோன்றும்
முருகா என்றேதுவார் முன்.

தமிழில் வல்லினம், மெல்லினம், இடையினம் என்று மூன்று இனங்களில் இனத்திற்கு ஒரு எழுத்து சேர்ந்ததுதான் 'முருகு' என்ற சொல்.

அப்பெயர் உயர்ந்த சான்றோர்களின் வழிவழி வந்த தொன்மை உடையது என்பதைத்தான் நக்கீரர் "அரும் பெறல் மரபின் பெரும் பெயர் முருக" என்கிருர்.

குறிஞ்சி, முல்லை, மருதல், நெய்தல் என்ற நால் வகை நிலங்களில் முதன்மையான குறிஞ்சி நிலத்தின் தலைவன்தான் முருகன். குறிஞ்சிக் கிழவனாகிய முருகனை உயர்ந்த மலைமேல வைத்து வணங்கினார்கள். உயர்ந்த தெய்வம் தெய்வசிகாமணிதான் முருகன். 'மலைக்கு நாயக' என்று அருணகிரியார் அதைத்தான குறிப்பிடுகிருர். நக்கீரரோ திருமுருகாற்றுப் படையில் 'மலைக் கிழவோனே' என்று முடித்து வைககிருர்.

ஆன்மாக்களின் நலன கருதி செவவணணச் சிவமூர்ததி எடுத்துக் கொண்ட அருள திருவுருவங்கள் பல. தொன்மையும் நன்மையும் மிக்க வடிவம ஆறு முக வடிவம்.

அந்திக்குநிகர் மெய்யன்னால்
அருள்புரிந்து அறிஞராயோர்
சிந்திக்குந் தனது தொல்லைத்
திருமுகம் ஆறுங்கொண்டான்"

என்று கந்தபுராணத்தில் கூறுகிருர்.

பழைய வடிவாகிய வேலா' என்று அருணகிரியாரும் இதனைத்தான் குறிப்பிடுகிருர்.

ஆறு சமயஙகள, ஆறு ஆதாரங்கள், ஆறு அத்துவாக்கள், அறுபடை வீடுகட்டும் அதிபன்தான் ஆறுமுகப்பெருமான். தெய்வத் தன்மை, இனிமை, இளமை, மணம், மகிழ்ச்சி, அழகு என்ற ஆறு தன்மைகளை உடையவன்தான் முருகன்.

முருகுகண் இளமை நாற்றம்
முருகவேள் விழா வனப்பாம்"

என்பது பிங்கல நிகண்டு.

ஞானவடிவாய்த் திகழ்பவன் முருகன். அவன் கையிலிருக்கும் வேல் ஞானவேல். அவன் புகழைக் கூறுதல் என்பது எளிதான செயலா?

"ஞானந்தான் உருவாகிய
நாயகன் இயல்பை
யானும் நீயுமாய் இசைத்தும்
என்றால் அஃதெளிதோ"

என்று கந்தபுரணம் நம்மைக் கேள்வி கேட்கிறது. இதனைத் தான் அருணகிரியார்,



"அறிவுமறி யாமையுங் கடந்த
அறிவு திரு மேனியன்றுணர்ந்துன்
அருண சரணர விந்தமென்று
அடைவேனோ"

என்கிருர்.

பல பிறவிகளில் செய்த புண்ணியப் பயனாகத்தான் 'முருக பக்தி' கிடைக்கும்.

"முருகனென்று மொழிந்து
மொழிந்துளத்
துருகு மன்பினர்க் கும்முரு
கா நிற்போ
ரருகு சென்றிடு மன்பர்க்குங்
காமமாங்
பெருகு மாறுஞ் செலாதுளம்
பேதுறும்"

என்றும்,

மூக்கினோட விழிமுகிழ்த்
தன்பின்வே
ணேக்கு நோன்பி யர்க் குந்நுவ
லாநிற்கும்
வாக்கினூடு மனத்தும்
பெருக்கொடு
தேக்கு மானந்த ஞானச்
செந்தேறலாம்"

என்றும் திருச்செந்தூர் தல புராணம் கூறும்.

இதைத்தான் திருமூலர்,

"நெற்றிக்கு நேரே புருவத்
திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும்
மந்திரம்
பற்றுக்குப் பற்ருய்ப் பரமன்
இருந்திடச்
சிற்றம்பலம் என்று தேர்ந்து
கொண்டேனே"

என்கிருர்.

தாயுமானவரோ "தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எந் நாளோ?" என்று ஏங்குவதும் இதற்காகத்தான். நோக்கில் அன்பு, வாக்கில் தேன், நெஞ்சில் இன்பம் இவைகளை அடைய நாம் முயல வேண்டும். அது எங்கனம் இயலும்? செவ்வேளை நினைத்துக் கொண்டிருப்பது தான். அவனை நினைப்பது என்ருல் எவ்விதம் என்று சேக்கிழார் சொல்கிருர்

கையுந்தலைமிசை புனையஞ்
சலியன
கண்ணும் பொழிமழை
யொழியாதே
பெய்யுந் தகையன கரணங்
களுமுடன்
உருகும் பரிவின பேறெய்து
மெய்யுந் தரைமிசை விழுமுன்
பெழுதரும்
மின்ருஞ் சடையொரு நின்ருடும்
ஐயன் திருநடம் எதிர்க்கும்
பிடுமலர்
ஆர்வம் பெருகுதல்
அளவின்ருல்"

கண்ணீர் மழை பொழிந்தால் தான் அவன பாதம் பற்ற முடியும் என்கிருர். அப்படி அவன் பாதம் பற்றினால் நமக்கு என்ன பலன் கிட்டும்? சிதம்பர சுவாமிகள்,

முருகா எனவுனை ஓதுந் தவத்தினர்
மூதுலகில்
அருகாத செல்வம் அடைவார் வியாதி
அடைந்து நய்யார்
ஒரு காலமுந்துன்பம் எய்தார்
பரகதி உற்றிடுவார்
பொருகாலன் நாடுபுகார்
சமரர்புரிப் புண்ணியனே"

என்று அடுக்கிக் கொண்டே போகிருர்.

முருகனை நினைக்கச் சொல்கிருர். அவனுக்கு ஒரு நாமமா இருக்கிறது. பல நாமங்கள். அவற்றில் எதைத்ததான் நினைப்பது? எதை மந்திரமாகக் கொள்வது?

ஒவ்வொரு நாமத்தின் மகிமையும் என்ன என்பதைத் தெரிந்து கொண்டால் எதை எந்த நேரத்தில் சொல்வது என்பது நமக்குத் தெரிந்துவிடும். ஒவ்வொரு நாமத்திலும் ஒவ்வொரு விசேஷம் உண்டு. சில நாமங்களை மட்டும் இங்குப் பார்ப்போம்.

## ஆறுமுகம்

ஷஷ்டி என்பது ஆருவது திதி. சண்முகன் என்பது ஆறு திருமுகங்கள் உடையவர் என்று பொருள். ஷட் முகர் என்பதே வடசொல். ஆறுமுகன் என்பது தென் சொல். கிழக்கு, தெற்கு வடக்கு, மேற்கு, மேல, கீழ் என்று ஆறு திசைகளிலும அவருடைய பாரவையுள்ளது. ஆறு திசைகளுக்கும் நாயகர் ஆறுமுகன். ஆறுமுகன் பெருமைகளை எழுத இயலாது என்கிருர். ['எழுதரிய ஆறுமுகம்'] அருணகிரியார்.

ஆறு திசைகளைப் பார்க்கும் ஆறுமுகன் ஈசானம், தத்புருஷம், வாமதேவம், அகோரம், சத்யோஜாதம் என்று ஐந்து முகங்களுடன் அதோ முகமும் சேர்ந்தது தான் ஆறுமுகங்கள். சிவபெருமானின் ஐந்து திருமுகங்களுடன் உமா தேவியாரின் திருமுகமும் ஒன்று சேர்ந்து ஆறு முகங்களாயின.

உமாதேவி-இகநலன்களை அருள்பவள்
பரமசிவம் - பர நலன்களை
அருள்பவர்

ஆறுமுகப் பெருமானோ இக, பர நலன்களை எளிதில் அடியார்க்கு வழங்குபவன் என்பதால்தான் திருப்புகழ் "இக பர சௌபாக்யம் அருள்வாயே" என்று புகழ்கிறது.

## குகன்

குமாரக் கடவுள் குறிஞ்சி நிலக் கடவுள். அதனால் மலைக் குகைகளில் கோயில் கொண்டிருப்பவன் குகன் எனப் பெயர் பெற்ருன்.

நம இதயக் குகையில் கோவில் கொண்டிருப்பவன் தான் குகன். இந்தப் பெயர் வேறு எந்தத் தெய்வத்திற்கும் இல்லாத ஒரு பெயர். 'சிவ' என்ற மகாமந்திரத்திற்கு ஈடான மந்திரம் 'குக' துயரக் கடலினின்று கரையேற்றும் மந்திரம் இது. இதனைத்தான் அருணகிரியார்,

"பல சாகரத்தி லழுந்தி
எழா எழா துனம்
ஆறெழுத்தை நினைந்து 'குகாகுகா'
எனும் வகை வராதோ"
என்றும்,

"குருவாய் வருவாய் அருள்வாய்
குகனே"
என்றும் பேசுகிறார்.

"குகமெனு நுட்பமாகிக் குகையெனு
மிதய வீட்டிற்
குகைவரை யிருப்பார் தங்கள்
குகையெனு மிதயப் போதி...

என்கிறது திருச்செந்தூர்த் தலபுராணம்.

இராமபெருமானின் மனக் குகையில் வசிப்பதால்தானே அந்த குகனை 'குகனொடு ஐவரானோம்' என்று இராமரே பேசுகிறார்.

## குமரன்

'குமரன்' என்று அழைக்கப்பட்டாலே சிவபெருமானின் திருக்குமரன் என்பது தெளிவாகும். சிவாயநம என்ற ஐந்தெழுத்தில் 'சிவ' என்பது போல் குமாராய நம என்ற ஆறெழுத்தில் 'குமார' என்பது உயர்ந்ததாகும்.

குமரன் என்றால், எப்போதும் இளமைப் பருவத்தை உடையவர், வெறுக்கப்பட்டவர்களைக் கொல்பவன். மன்மதனைப் போல் அழகாக இருப்பவன், நன் பக்தர்களுக்கு லட்சுமி சம்பத்தை வழங்குபவன், அதற்கும் மேலே ஆன்மாக்களின் மல பந்தங்களை அழிப்பவன் என்றும் பொருள்படும்.

கந்தரனுபூதியில் மூன்று திருநாமங்களைச் சிறப்பாகச் சொல்கிறார் அருணகிரியார்.

"...முருகன் குமரன் முகன் என்று
மொழிந்
துருகும் செயல்தந் துணர்வென்
றருள்வாய்"

என்பதில் குமரன் என்ற திருப்பெயரை நடுநாயகமாக வைத்தார்.

முருகனுடைய ஆகமம் 'குமார தந்திரம்', 'குமாரசம்பவம்' என்று காளிதாசர் பெயர் சூட்டி முருகன் புகழ்பாடினார். பாம்பன்சுவாமிகள் 'குமாரசுவாமியம்' என்று முருகன் புராணம் பாடினார்.

"குமரேச சதகம், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்" யாவும் குமரன் புகழ் பாடுவன.

"தாதா குமார நமவென் றரனார்
ஓதாவென ஓதிய தெப் பொருள்தான்"

என்று குமார மந்திரத்தின் மகிமையைச் சொல்லும்.

"குமாராநம என்று கூறினார்
ஓர்கால்
அமரா வதியான்வ ரன்றி -
எமசாரன்
கையுகுதார் போரூரன் கால்புகுவார்
தாயுரதம்
பையுகுதார் சேரார் பயம்"

என்று சிதம்பர சுவாமிகள் பாடுகிறார்.

"நயத்தகு மரபின் வியத்தகு குமர" என்று பரிபாடல் குமரன் புகழ்கூறுகிறது. (குன்றம் பூதனார் பாடல்)

## குழகன்

குழகு - அழகு. அழகின் கருவூலமாக விளங்குபவன் குழகன். அழகன் என்பதை அவருக்கு வேண்டியவர்கள் கூறினால் நாம் மறுக்கலாமா என்று யோசிக்கலாம். முருகனின் அழகைக் கண்ட சூரபன்மன் வியந்து கூறுகிறான்.

ஆயிர கோடிகாமர் அழகெலாத்
திரண்டொன்றாகி
மேயின எனினுஞ் செவ்வேள்
விமலமாஞ் சரணந்தன்னில்
தூயநல் எழிலுக் காற்ற
தென்றெடில் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற்கெல்லாம்
உவமையார் வகுக்கவல்லார்
--கந்தபுராணம்

"அறமுநிறமு மயிலுமயிலும்
அழகுமுடைய பெருமானே"
என்று அருணகிரியாரும் பாடுகிறார்.

முருகனை உபாசிப்பவர் மகமும் அகமும் அழகு பெறுவது திண்ணம். சமானமில்லாதப் பேரழகன் அல்லவா?

பல்போனாலும் சொல்போகாத திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் முகத்தில் இந்த வயதிலும் காணும் 'அழகு'க்குக் காரணம் அவரின் முருக பக்திதான்.

## குரு

அஞ்ஞானத்தை நீக்குபவர் குரு. ஆன்மாக்களின் அறியாமையிருளை அகற்றுபவர் குரு. குரு. குருநாதன், குருசாமி, குருமூர்த்தி, குமரகுரு, பரமகுரு, குரு

நிரோன்மணி, குருபரன் என்ற நாமங்கள் யாவும் முருகனையே குறிக்கும்.

நான்முகனையே பிரணவத தின் உண்மை கூற முடியாத காரணத்தால் குரு சிறையில் அடைத்து விடுகிறான்.

"......படைப்போன்
அகந்தை யுரைப்ப மறையாதி
யெழுத்தொன் று
உகந்த பிரணவத்தி னுண்மை
புகன்றிலையால்
சிட்டித் தொழிலதனைச்
செய்வதெங்ங னென்று முனம்
குட்டிச் சிறையிருத்தும்
கோமானே"

என்று கந்தர் கலிவெண்பா கூறும்.

அகலனுக்கு பிரணவத்தின் பொருளைக் கூறும் குருவான தால் 'குரு' என்ற பெயர் முரு கனுக்கு ஏற்பட்டது. குரு எழுந் தருளியுள்ள மலையான சுவாமி மலைக்கு குருமலை என்றும் பெயர் உண்டு.

திருஎழுகூற்றிருக்கைத் துதி யில் அருணகிரியார்

காவிரி வடகரை மேவிட
குருகிறு இருந்த
ஆறெழுத் தந்தணர் அடியினை
போன்ற
ஏரகத் திறைவன் என
இருந்தனையே.
என்று பாடி மகிழ்கிறார்.

## காங்கேயன்

கங்கைக்கு மைந்தனாக வந்த வன் என்று பொருள்.

## கார்த்திகேயன்

கார்த்திகைப் பெண்கள் பாலூட்டித் தாலாட்டி வளர்த் ததனால் கார்த்திகேயன் எனப் பெயர் பெற்றான். "அறுமீன் காதலன்" என்றும் கூறுவர்.

## கந்தன்

பகைவருடைய பராக்கிர மத்தை வற்றச் செய்கிறவன் ஸ்கந்தன். ஆறு திருமேனியும் ஒன்றாகப் பொருந்தியவன்.

"அந்தமில்லாதோர் மூவிரு வடிவம்
ஒன்றாகிக்
கந்தன் என்று பேர் பெற்றனன்
கவுரிதன் குமரன்"

ஆன்மாக்களுக்குப் பற்றுக் கோடாக இருப்பவனின் புக ழைப் பாடும் வடமொழியில் வரும் 108 திருநாமங்களில் முத லில் நிற்பது 'ஸ்கந்தாய நம:' என்பதாகும்.

அவருடைய புராணம் கந்த ரந்தாதி, கந்தரலங்காரம், கந் தர் அனுபூதி, கந்தர் கலி வெண்பா, கந்தர் சஷ்டி கவசம், கந்தகுரு கவசம், கந்தகோட்டம் என வருவதாலும் கந்தன் என்ற நாமத்தின் பெருமை விளங்கும்.

'பார்வதி! உன மைந் தன் மூவுலகிலும் பராக்கிரமத் துடன் ஆக்கிரமித்து நிற்றலி னால் கந்தன் எனப்படுகிறான்' என்று பரமசிவனே கூறுகிறான்.

"சேயவன் வடிவம் ஆறுந் திரட்டிநீ
ஒன்றாய்ச் செய்தார்
ஆயத னாலேகந்த னாமெனும்
நாமம் பெற்றான்"

என்று கந்தபுராணம் கூறும். ஸ்கந்த என்றால் தோள். தோள் வலி மிக்கவன் ஸ்கந்தன்.

சிவபிரான் முருகனை உண் டாக்குவதற்கு வீரியத்திரட் டினை ஐந்து இடங்க ளில் பொருந்தி அமைத்தறி னால் 'ஸ்கந்தன்' என்ற பெய ரால் அழைத்து கார்த்திகைப் பெண்களிடம் விட்டார்.

"இரண்டு மூன்றிடத் துற்றதாற்
கந்தனென் றிசைத்துத்
திரட்ட வானவர் கார்த்திகை
யாந் தெரிவையரைச்..."

என்று திருச்செந்தூர்த் தலபு ராணம் கூறும்.

## கடம்பன்

முருகனுக்கு உகந்த மலர் கடப்ப மலர். கடப்ப மலர் மாலையைப் புனைந்தவன் கடம்பன்.

கடப்பமலர் கார்காலத்தில் பூக்கும்.

"உருள்பூந் தண்டார் புரளு
மார்பினன்"

என்று நக்கீரர் திருமுருகாற் றுப் படையிலும்,

"...மயிலேறும் ஐயன்
காலுக்கணிகலம் வானோர்
முடியும் கடம்பும்"
என்று கந்தரலங்காரத்திலும்,

பலபல மைப்பொன் பதக்கமாரமும்
அடிமை சொலுஞ்சொல்
தமிழ்ப் பனீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப
மாலையும் அணிவோனே"

என்று திருப்புகழிலும் அரு ணகிரியார் பாடிமகிழ்கிறுர்.

நக்கீர தேவரோ "பூக்கும் கடம்பா" என்றே அவனை அழைக்கிறுர்.

### குறிஞ்சிவேந்தன்

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் பூ குறிஞ்சி. அந்தக் குறிஞ்சி மலர்கள் நிறைந்த இடம் மலை சூழ்ந்த இடம். எனவே மலைகள் சூழ்ந்த இடத்தை குறிஞ்சி என்று பெயர் சூட்டினர். நால் வகை நிலங்களில் குறிஞ்சி முரு கனுக்கு உகந்த நிலம். பன் னிருகை வேலவனுக்கு பன்னி ரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் குறிஞ்சிமலர் பூக்கும் இடம்தானே விருப்பமான இட மாகும்.

"சேயோன் மேய மைவரை யுலகு" என்று தொலகாப்பியம் இதனைச் சொல்லும். குன்று தோறும் ஆடும் குமரனல்லவா நம் குறிஞ்சிவேந்தன். இதனைத் தான் நக்கீரர்,

"விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ" என்று திருமுருகாற்றுப்படையில் பாடி மகிழ்ந்தார்.

### சரவணபவன்

சரம் என்ருல் நாணல் - வனம் என்ருல் காடு. பவன் - தோன்றியவன். நாணற் காட்டில் தோன்றியவன் என்று பொருள்கொள்ளலாம்.

வனம் என்ருல் நீர் என்று ஒரு பொருள் உண்டு.

"அறையோத வனஞ்சூழ்புவி" என்று வில்லிப்புத்தூரார் பார தத்தில் நீரால் சூழப்பட்ட உல கம் என்று கூறவந்தவர் நீர் என்பதைக் குறிக்க 'வனம்' என்ற சொல்லையே உபயோ கித்தார். 'நாணல் செறிந்த தண் ணீரில் தோன்றியவன்' என்றும் பொருள் கொள்ளலாம்.

'சரவணபவ' என்பது சடாக் கர மந்திரமாகும். சரம் வனம் சேரும் போது ணகரமாகத் திரி யும் என்பது விதி. மந்திரமாக உச்சரிக்கும் போது, சுப்ரஹ் மண்யோம், ஓம்சரவணபவாய, ஓர் நாராயணுய என ணக ரம் பொருந்தவே உச்சரிக்கப்ப டுவதை அறிவோம்.

ஆறெழுத்து மந்திரம் 'சரவ ணபவ'. ச - மங்களம், ர - ஒளி, வ - அமைதி, ந - போர் இந்நான்குடன் பவன் தோன்றி யவன் என்றும் பொருள் கொள் ளலாம் என்று மேலோர் கூறு வர்.

"...எமை யநு விதிக்கும் ஸ்வாமி
சரவண
தகப்பன் ஸ்வாமி என
வரு பெருமாளே"

என்று அருணகிரியார் அவன் புகழ் பாடுகிறுர்.

### சாமி

ஸ்வம் என்ருல் சொத்து. அகில உயிர்களையும் தனது சொத்தாக உடையவன் ஸ்வாமி. ஸ்வாமி என்ற பெயர் முருக னுக்கு மட்டுமே உரிய பெயரா கும்.

சுவாமி கோவில் கொண்டிருக் கும் மலை சுமாமிமலை என்ற நான்காவது படைவீடாகும்.

வெத்தின்சாமி மயில்மிசை
நடிக்குஞ்சாமி எமதுளே
சிறக்கும்சாமி சொரூபமி
தொனிகாணச்
செழிக்குஞ்சாமி பிறவியை
ஒழிக்குஞ்சாமி பவமதை
நெறிக்குஞ்சாமி முநிவர்கள்
இடமேவுந்
தவத்தின்சாமி புரிபிழை
பொறுக்குஞ்சாமி குடிநிலை
தரிக்குஞ்சாமி அசுரர்கள்
பொடியாகக்
கதைக்குஞ்சாமி எமைபணி
விதிக்குஞ்சாமி சரவண
தகப்பன்சாமி எனவரு
பெருமாளே

என்கிறுர் அருணகிரிநாதர்.

### சுரேசன்

மாலயனாதி சுரர்கட்குத்தலை வர் சுரேசன்.

### சூர்ப்பகைவன்

சூரபன்மன் என்ற ஆணவ மலத்துக்குப் பகைவன்.

### செட்டி

மதுரையில் உப்பூரி கிழா ருக்கு மகனாய், உருத்திர சன் மனாய் செட்டிக் குலத்தில் வந் தவனாதலால் 'செட்டி' என்ற பெயரைப்பெற்ருன்.

செட்டி வியாபாரம் செய்ப வன். அடியார்களின் பக்தி யுடன் கூடிய அன்பைப் பெற் றுக் கொண்டு தனது அருளைத் தரும் வியாபாரிதான் முருகன்.

செட்டியென்று வனமேவி இன்பரச

சத்தியின் செயலினாளை அன்புருக
தெட்டிவந்து புலியூரின் மன்றுள்
வளர் பெருமாளே

என்று வள்ளிநாயகியிடம் வளையல் வியாபாரியாக (செட்டி) சென்றதை அருணகிரிநாதர் கூறுகிறுர்.

தணிகை உலாவில்,

"கோடு திரியுங் குறச்செட்டி
கீரனுக்கு வீட்டுவழி காட்டி யிரும்
வேளாண்மையாஞ் செட்டி
அன்னதான செட்டி
சிவபர ஐக்கியஞ் செய்திரு
கந்தப்ப செட்டி

என்றல்லவா புகழ்கிறுர்.

### செவ்வேள்

செம்மை நிறம் கொண்டு மற்றவர்களால் விரும்பப்படுபவன் என்று பொருள்.

வேள் என்பது பொதுவாக மன்மதனைக் குறிக்கும். அவன் கருமை நிறம் கொண்டவன் - கருவேள. முருகன் சிவந்த நிறம் கொண்டவன் - செவ்வேள்.

மன்மதன் இச்சை உண்டாக்குபவன் - செவ்வேள் ஞானத்தை உண்டாக்குபவன். பந்தம் உண டாக்குபவன் காமன் - பந்தம போக்குபவன் கந்தன். பிறப்பை ஆக்குபவன் கருவேள் பிறப்பு இறப்பு இரண்டையும் போக்குபவன் செவ்வேள்.

### சேந்தன்

செந்தழற் பிழம்பாய் விளங்குபவன் என்று பொருள்:

"செக்கரும் செம்மையும் சேந்து பாடலமும்" என்று பிங்கல நிகண்டு பகரும்.

'சேந்தனைக் கந்தனை செங்கோட்டு வெற்பனை...' என்று பாடுகிறுர் அருணகிரியார்.

### சேய்

குழந்தையாக விளங்குபவன் முருகன். அவனுக்கு சேய் என்று பெயர் உண்டு.

### சேவற்கொடியோன்

வீரம் செறிந்தது சேவல். முருகன் வீரமூர்த்தி, வீரமூர்த்திக்கு வீரப்பறவையாக சேவல் கொடியாக இருப்பதில் வியப்புண்டோ?

"கோழி யோங்கிய வென்றடு
விறற்கொடி"

என்கிறுர் நக்கீரர்.

"வாலிகிரியைத் தனது தாளில்
இடியப்பொருது
வாகை புனை குக்கட
தாகைக்காரனும் - திருவகுப்பு
சென்றேயிடங்கள் கந்தா எனும்போது
செஞ்சேவல் கொண்டு வரவேணும்"

என்று அன்பாக வரவேற்கிறுர் அருணகிரியார்.

காலில் ஆயுதத்தைக் கட்டி இரண்டு சேவல்களைச் சண்டை போடப் பழக்குவாரகள். அதனால் சேவலுக்கு 'காலாயுதம்' என்றும் பெயருண்டு. காலாயுதக்கொடியோன் நம் வேலாயுதன்.

### தேவசேனாதிபதி

தேவர்களின் சேனாதிபதியாக வசிட்டர் முதலிய பிரம்ம ரிஷிகள் முருகனுக்கு பட்டாபிஷேகம் செய்ததால் தேவசேனாதிபதி ஆனார்.

அந்த தேவசேனாதிபதிக்கு யார் யார் பணிவிடை செய்தார்கள் பாருங்கள்.

"இந்திரன் கவரி சாய்ப்ப இமையவர்
வட்டம் வீசச்
சந்திரன் தபனன் என்போன்
தண்ணிழற் கவிப்புத் தாங்க
அந்தகன் உடைவாள்பற்ற இயக்கக்-
கோன் அடப்பை கொள்ளச்
சந்துநீர் அரசன் செம்பொற்
படியகம் ஏந்தச் சென்றுன்"

என்று கந்தபுராணம் கூறுகிறது.

"வானோர் தானைத்தலைவ" என்று கூறும் திருமுருகாற்றுபடை.

### விசாகன்

பட்சியின் மீது சஞ்சரிக்கிறவன். மயில்வாகனன் என்று பொருள்படும்.

விசாக நட்சத்திரத்தில் ஒளியுருவாகத் தோன்றியவன் என்பதால் இந்தப் பெயர் உண்டாயிற்று என்பாரும் உளர்.

### வேலன்

வேலை உடையவன் வேலன். வெல்லுவது வேல். அவன கைவேல் ஞானவேல். ஞானம் யாவற்றையும் வெல்லுந்தானே?

அகண்ட சித் சக்தியே வேல்.

"சக்திதான் யாதோ என்னில் தடையிலா ஞானமாகும்" என்கிறது சிவஞான சித்தம்.

'ஞானபூரண சக்தி தரித்தருள்

பெருமானே' என்கிறார் அருண கிரியார்.

வேலின் அடிப்பகுதி ஆழம் நிறைந்தது. இடைப்பகுதி அகலம் நிறைந்தது. நுனிப்பகுதி கூர்மை நிறைந்தது. ஆக அறிவு ஆழம் அகலம் கூர்மை உடைய ஞானமாக இருந்தது.

"ஆழ்ந்தகன்ற நுண்ணியனே" என்று திருவாசகத்தில் குறிப்பிட்டிருப்பதால் இந்தப் பெருமைகளைப் பெற்றுள்ள சிவபெருமானின் குமாரனான முருகனுக்கும் அப்பெருமைகள் உள்ளன என்பதை நாம் அறிந்து கொள்ளலாம்.

### முத்தையன்

முத்து பிறக்கும் போதே ஒளியுடன் பிறக்கும். முத்தைப் போல பிறக்கும் போதே ஒளியுடன் பிறந்தவன் முருகன். எனவே முத்தையன் என்ற பெயர் அவனுக்குப் பொருத்தமே.

### சுப்ரமணியன்

மேலான பெரிய பொருளிலிருந்து தோன்றி ஒளி செய்பவன் என்பது பொருள்.

ஸுப்ரஹ்மண்யோம் என்பது மாபெரும் தெய்வ வேத மந்திரம். ஸு: தூய இன்பம். ப்ரஹ்மம் - பெரிய பொருள், அதாவது ஞான ஆகாயம். நியம் (அனுபூதியில் சுப்பிரமத்திலிருந்து) வெளிப்பட்டு விளங்கும் ஒளி என்பது இம்மந்திரத்தின் பொருள். மந்திரப்பொருளான சுப்ரமணியத்தை நாம் துதித்தால் எல்லாமே சித்திக்கும்.

### சோமாஸ்கந்த மூர்த்தி

சிவ மூர்த்தங்களில் இருபத்தைந்தில் இருபத்தோராவது சோமாஸ்கந்த மூர்த்தமாகும்.

சத்து - சிவம், சித்து - உமை, ஆனந்தம் - கந்தன், சச்சிதானந்தம். மலரில் மணம், வண்ணம், வடிவம் என்ற மூன்றும், நெருப்பில் வண்ணம், சூடு, ஒளி என்ற மூன்றும், ஒரு பொருளில் அகலம், நீளம், கனம் என்ற மூன்றும் பிரிப்பின்றி நிற்கும். பரம்பொருள் சத்து, சித்து ஆனந்தமாக விளங்குகிறார்.

சிவம், உமை, முருகன் மூன்றும் ஒரே பொருளாகும்.

"சத்தெனச் சொலுந் தாவில்
சிவத்திலும்
சித்தெனச் சொலுந்தேவி யிடத்திலும்
புத்திரப்பெயர் பூண்டில கானந்த
வத்து விண்கழல் வாழ்த்தி
வணங்குவோம்"
(பரிபூரணானந்த போதம்)

பல்வேறு பெயர்கள் இருப்பினும் சில பெயர்களையே இங்குப் பார்த்தோம். பல பெயர்கள் முருகனுக்கு இருப்பினும் சடாக்கரத்தின் மகிமை உணர்ந்து உருகிச் சொன்னாலே அருகில் வருவான் முருகன். உளம் உருகச் சொல்வதை அருணகிரியார் சீர்பாதவகுப்பில்:

"முருக! சரவண! மகளிர் அறுவர்முலை
நுகரும் ஆறு
முக! குமர! சரணம் என
அருள்பரவி ஆடிமிக
மொழிகுரு அமுழுதொழு
துருகுபவர் விழி அருவி
முருகுவதும் வருக! என
அறைகூறி ஆளுவதும்
முடிப்வழி வழி அடிமை எனும்
உரிமை அடிமை முழு
துலகறிய மழமைமொழி
கொடுப்பாரும் சககவி
முதலமொழி வளரியுடை
மதுயருகர் இதமவுத
முருளபரி மனதிகில
கவிமாலை சூடுவதும்

என உருகினால் அவனும் உருகுவான் என்கிறார்.

முருகனுக்கு இன்னும் பாவகி, வாகுலேயன் என்றெல்லாம் அநேக நாமங்கள் உள்ளன. அவற்றை விரிக்கிற் பெருகும். நாமத்தின் பொருளுணர்ந்து அவனை நினைந்தால் நமக்கு எல்லா நலன்களும் அருள்வான்.

......காதலாற் குமரன்
சீர்த்தியைப் புகன்றவர் யார்க்கு
நன்றுணர் தருமம் பொருளின்ப
மோக்க
நண்ணுமா யினிதுகே
னவில்வாம்"

என்று ஒரு புலவர் முருகன் கழலிணைப் பற்றினால் என்னென்ன நமக்கு சித்திக்கும் என்று பட்டியல் போடுகிறார்.

அவன் திருப்பதிகள் ஆறு திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோராடல், பழமுதிர்ச்சோலை என்ற அறுபடை வீடுகளுக்குச் சென்று அவனைத் தரிசித்து அவன் பாதத்தை நினைந்தால் எல்லா இகபர சுகங்களும் நல்குவான்.

"ஆறு திருப்பதிகண் டாறெழுத்தை
யன்புடனே
கூறுபவர் சிந்தைகுடி
கொண்டோனே"

என்று கந்தர் கலிவெண்பா கூறுகிறது. அந்த ஆறெழுத்தை சிந்தையில் கொண்டாலே நம் சிந்தையில் அவன் குடி கொண்டு விடுவான்

அவன் முகங்கள் ஆறு. அவை எல்லாத் திசைகளையும் காண்கிறது. அவனது கடாட்சத்தில் நாம் என்றும் இருக்கிறோம். பாராமுகமாய் அவனால் இருக்க முடியாது. தவறு செய்பவர்களையும் கருணையால் தன்பால் ஈர்த்து மன்னித்து நல்வாழ்வு அளிப்பவன் முருகன்.

உலகில் தீயசக்தி பலம் பெறும்போதெல்லாம் கடவுள் அவதாரம் எடுப்பார். சூரபத்மனை அழிக்கவே முருகன் உண்டாக்கப்பட்டான். நம் முருகனோ அறக்கருணையால் நன்மையும் செய்வான். 'பாலன்' என்று ஏளனமாய் நினைந்து முருகனிடம் போரிட்ட சூரபத்மனை திருந்த வைத்தான். மனம் மாறிய சூரபன்மன்,

'"கோலமா மஞ்சை தன்னில்
குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தேன் அந்நாள்
பரிசிலை உணர்ந்திலேன்யார்
மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகாரணமாய் நின்ற
மூர்த்தியிம் மூர்த்தியன்றே."

என்று புகழ்ந்து வியக்குமளவுக்கு அவன்தமோ குணம் அழிந்து ஞானத்தை அளித்து விடுகிறான் நம் ஞானமூர்த்தி. மயிலாகவும் சேவலாகவும் உரு மாறி முருகனை எதிர்த்து போர் செய்த சூரபத்மனைத் தன் கருணையால் 'நன்றே செய்வார் பெரியோரே' என்ற விதிக்கிணங்க அவனது குற்றங்களை மன்னித்து மயிலை தனது வாகனமாகவும் சேவலைத் தன் கொடியாகவும் செய்த தயாள மூர்த்தியன்றோ குமரன்.

முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போன் அல்லவா நம் முருகன். இதுவரை அவனை நினையாதிருந்தாலும், வைது கொண்டிருந்தாலும் இனிமேலாவது அவன் பாதம் நண்ணினால் பவக்கடலைக் கடக்க உதவி செய்வான் முருகன். எனவே முருகன் திருவடிகளை எப்பொழுதும் எண்ணுவோம்.✳

---

# சத்தான குழந்தைகள் பிறக்க சாஸ்திரம் சொல்லும் முறை

* ருது ஸ்நானம் செய்த தினமும், ஒற்றைப்படையாதலின் ஐந்தாவது தினமும், ஸ்திரி புருஷ உறவுக்கு ஏற்றதல்ல.
* இரட்டைப்படையான நாளில் உறவு கொண்டால் பிள்ளைக் குழந்தையும்;
* ஒற்றைப்படையான நாளில் உறவு கொண்டால் பெண்குழந்தையும்;
* இரவின் முதல் பாகத்தில் உறவு கொண்டால், தர்மமில்லாத குழந்தையும்
* சந்தியா காலத்தில் உறவு கொண்டால் நபும்ஸகமான பிள்ளையும் பிறக்கும்.

**செய்யக்கூடாதது**

* கன்று ஊட்டும் போது அதை யஜமானனிடம் சொல்லக்கூடாது.
* இரண்டு கைகளாலும் நீரைக்குடிக்கக்கூடாது.
* வாயால் அக்னியை ஊதக்கூடாது.
* உரல், உலக்கை, முறம் இவைகளைக் காலால் தொடக்கூடாது.

தொகுப்பு: மைதிலி மணாளன் - சென்னை.

# திருமலை பிரம்மோத்ஸவம்

உமைப்பிரியன்



சமய உணர்வும சமுதாயக் கடமையும் பின்னிப் பிணைந்த கலாசாரத்தினைக் கொண்டு விளங்கிடும் ஒரே மண் இப் பாரதமேயாகும். குறிப்பாகத் தென்னகம் பக்தியின் ஊற்றுகத் திகழ்ந்து வந்துள்ளது. மொகலாயர் மற்றும் ஆங்கிலேயர் ஆட்சியின் போது இந்து சமயம் தென்னகத்தில் மேலும் வீறு கொண்டு எழுந்துள்ளது. அவ்வெழுச்சிக்கு அன்றும் இன்றும் ஒரு நிதர்சன உண்மையாகத் திகழ்ந்து வருவது, ஒரு பக்தி இயக்கமாக சிறந்து விளங்குவது திருமலைக்கோயிலாகும்.

வேத உபநிஷத்துக்களாலும் புராண இதிஹாஸங்களாலும், சமய இலக்கியங்களாலும் புகழ்ந்து போற்றப் பட்டு, இன்று நாளும் திருமலைக்கு வருகை புரியும் பல்லாயிரக்கணக்கான சாமான்ய பக்தர்களால் வணங்கப்படும் ஒரே தெய்வம் அத்திருமலையில் நின்ற வண்ணம் திருவருள் புரிந்திடும் 'ஸ்ரீவேங்கடேஸ்வரர்' எனும் அத்திருமலையானேயாவான்.

கலியுக மாந்தர்கள் மாண்புறும் வகையில் தன் அர்ச்சாவதாரத் திருமேனியழகால் பக்தர்களுக்கு நாளும் கடாக்ஷித்து வரும் வேங்கடவனது இத்திருக்கோயில் இரண்டாயி

ஆண்டுகளுக்கு முன்பேயே தொல்காப்பியம், சிலப்பதிகாரம் போன்ற தமிழ் இலக்கியங்களில் போற்றப்பட்டு, பின்னர் கி.பி. 8-ஆம் நூற்றாண்டிலிருந்து 16-ஆம் நூற்றாண்டு இடைப்பகுதி வரை குறும்ப, பல்லவ, சோழ, பாண்டிய மன்னர்கள் காலத்தும், அதனைத் தொடர்ந்து காடவராயர்கள், யாதவராயர்கள், விஜயநகரப்பேரரசு ஆகியோர்களால் போற்றிப் பாதுகாக்கப்பட்டு வந்ததை கோயில் கல்வெட்டுகள் பறைசாற்றுகின்றன.

இத்தகு பெருமைமிகு வேங்கடவன் கோயில் கொண்டுள்ள திருமலை நாளும் விழாக்கோலம் பூண்டாலும், ஆண்டுக்கு ஒரு முறை அதாவது, புரட்டாசி மாதத்தில் நவராத்திரி விழா நாட்களின் போதும், மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை அதிக



உத்ஸவர்

மாதம் வருவதால் அப்போது ஆவணி மாதத்தில் இரண்டாம் முறையாகவும் கொண்டாடப்படும் 'பிரம்மோத்ஸவம்' எனும் பெருவிழா திருமலையினை பூலோகத்தில் ஒரு வைகுண்டமாக மாற்றிவிடும் என்றால், அது மிகையாகாது. தூறலுடன் கூடிய குளிர் காற்று நம் உடலை அணைத்திட, 'கோவிந்தா', 'பாலாஜி',



சேஷ வாகனம்

'ஸ்ரீநிவாசா', 'ஏழுமலையானே', 'ஏடுகொண்டலவாடா' என்று மொழி, இட, இனம் கடந்து ஒலித்திடும் இறைவனின் திருப்பெயர்களும், திருமலை முழுவதும் ஒலிப்பெருக்கிகளின் மூலம் கேட்டிடும் வேத மந்திர ஒலிகளும், பக்திப்பாடல்களும், நாளும் பல்வேறு வாகனங்களில் எழுந்தருளி திருமலை மாட வீதிகளில் திருவீதி உலா வரும் ஸ்ரீதேவி பூதேவி சமேத ஏழுமலையானின் உத்ஸவமூர்த்



கருட வாகனம்

தியின் வடிவழகும் அரச்சகர்களின் கைவண்ணத்தினைக் காட்டிடும் உத்ஸவர் மற்றும் வாகனங்களின் மலர், ஆபரண அலங்கார அமைப்புகளும் கண்களுக்கும் கருத்துக்கும் பெருவிருந்தாக அமைந்து, உள்ளத்தைக் கொள்ளை கொண்டிட நம் இப்பிறவிக்கு ஓர் பயன் கிடைத்திடும் என்றே கூறவேண்டும்.

## புராணப்புகழ்

கலியுகத் தீமைகளிலிருந்து மக்களைக் காப்பாற்றி உய்விக்க எண்ணங்கொண்டு, முனிவர்கள் தேவர்கள் விருப்பப்படி திருமலையில் ஸ்ரீநிவாசப் பெருமாள் எழுந்தருள, அவ் இறைவனுக்கு பிரம்மன் தன் மேற்பார்வையில் பெரிய உத்ஸவம் ஒன்று நடத்தியதாக வராஹ புராணத்தில் 19-வது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

'உயர்ந்ததாக ஒளிரும் ஆபரணங்களை அணிந்து கொண்டு உச்சைஸ்ரவ எனும் குதிரை, ஐராவதம் எனும் யானை, சேஷன் எனும் பாம்பு, வேதங்களின் இருப்பிடமான கருடன் ஆகியோரை வாகனங்களாகக் கொண்டு வேங்கடவன் ஸ்ரீலக்ஷ்மி தேவி உடன் அமர, வேதகானம் பின்தொடர திருவுலா நாளும் வந்தான்'' என்று மேற்படி புராணம் கூறும் முக்கிய பிரம்மோத்ஸவ செய்தியாகும். மேலும் வேங்கடாசல மஹாத்மியத்திலும் இப்பிரம்மோத்ஸவத்தைப் பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன.

**வரலாற்றுப் புகழ்**

இம்மண்ணின் பழமையின் சிறப்பினை விளக்குவதாக அமைவன கல்வெட்டுகளும், ஓலைச் சுவடிகளுமாகும். இவ்வகையில் திருமலைக் கோயில் பற்றியும், இப் பிரம்மோத்ஸவத்தைப் பற்றியும் பல தகவல்களை கோயில் பிராகாரச் சுவற்றுக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இவற்றுள் பல காலத்தால் சிதைந்தாலும், மறைந்தாலும் பிரம்மோத்ஸவத்தைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்பு ஒன்று மிகவும் பயனுள்ளதாக அமைந்துள்ளது. கோயிலின் முதல் பிரகாரத்தின் வடக்குச் சுவரிலுள்ள கல்வெட்டு ஒன்று தெரிவிப்பதாவது:



ஊஞ்சல் சேவை

"ஸ்வஸ்திஸ்ரீ கொப்பத்ரு பன்மற்கு யாண்டு கச-வது சக்தி வீடங்கநாகிய ஸ்ரீகாடபட்டிகள் பெறக்கடையார் மகள் சாமவையாகிய காடவன் பெருந்தேவி ஸ்ரீவேங்கடத்து எழுந்தருளி நின்ற பெருமானடிகளுக்கு... கொண்டருளி வெள்ளியால் எழுந்தருளிவித்த மணவாளப்பெருமானுக்கு மார்கழி திருத்துவாதசிக்கு திருக்கொடி ஏற்றத்து திருமுளை அட்டி ஏழுநாள் திருவிழா இரண்டு பொழுதும் எழுந்தருளிவிப்பதற்கு வைத்த பூமி வேங்கடக்கொட்டத்து திருக்கூடஆர்நாட்டு திருச்சுகனூர் சபையார்க்கும் தேவர்க்கும் பொன் குடுத்து இறை இழித்தி...சந்திராதித்த வரை செல்வதாக குடுத்தோம் சாமவையாகிய காடவன் பெருந்தேவியேன்"

அதாவது பல்லவ நாட்டைச் சார்ந்த சாமவை எனும் காடவன் பெருந்தேவியானவள் வேங்கடவனுக்கு மார்கழி மாதத்தில் ஏழுநாட்கள் விழா எடுத்ததாகவும் இதற்காகப் பொன்னும் பொருளும் அளித்ததாகவும்; வானத்தில் சூரியன் சந்திரன் இருக்கும் வரை இவ்விழா

மகோத்ஸவ விழா கொண்டா டப்படுகின்றது. கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆங்கிலேயர் ஆட்சியின் போது திருமலை உள்ள சித்தூர் மாவட்டத்தின் கலெக்டர் ஜியார்ஜ் ஸ்ரேட்டான் என்பவரின் தனி முயற்சியால் சேகரிக்கப்பட்ட 'சவால் - ஏ - ஜவாப்' எனும் குறிப்புப் புத்தகத்திலிருந்து அன்று நடைபெற்ற பிரம்மோத்ஸவத்தைப் பற்றிய செய்திகள் அறிய முடிகின்றது.



சக்ர ஸ்நானம்

நடைபெற வேண்டுமென்று கூறியதாகவும் இக்கல்வெட்டு கூறும் செய்தியாகும். மேலும் இப்பல்லவ நாட்டு அரசியானவள் இவ்விழாவுக்கு வெள்ளியில் ஸ்ரீநிவாசரின் ( உத்ஸவ) விக்ரகத்தை செய்து தந்ததாகவும், விலையுயர்ந்த வைரம் பதித்தப் பொற்கிரீடம மற்றும் பல ஆபரணங்கள் தந்ததாகவும் கூறப்படுகிறது. சாமவை நடத்திய இவ்விழா இரண்டாவதாகக் கூறப்படுகிறது. முதல் 'பிரம்மோத்ஸவ விழா' புரட்டாசி மாதத்தில் நடைபெற்றதாகத் தெரிகிறது. ஆராய்ச்சி அறிஞர்கள் சாமவை காலத்தை பல்லவ மன்னனான தணடிவர்மன் காலத்தோடு இணைப்பதால் சாமவையின் காலம் கி.பி. 8- ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கூறலாம். மேலும் கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுக் குறிப்புகளிலிருந்து கி.பி. 9 அல்லது 10-ஆம் நூற்றாண்டுகளின் போது புரட்டாசி மார்கழி மாதங்களில் மட்டுமின்றி, ஆடி மாதத்திலும் ஏழுமலையானுக்கு திருக்கொடித் திருநாள் எனும் பெயரில் மற்றொரு பிரம்மோத்ஸவம் நடைபெற்றதாகத் தெரிகிறது. கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் ஸ்ரீஇராமானுஜர் முயற்சியினால் திருமலையில் மற்றுமொரு பிரம்மோத்ஸவம் நடைபெற்றதாக அனந்தராயர் இயற்றிய "ஸ்ரீவேங்கடாஜல இதிஹாஸமாலை" எனும் நூலின் மூலம் தெரியவருகின்றது. இவற்றைத் தவிர கி.பி. 14-ஆம் நூற்றாண்டு இறுதியில் விஜயநகர பேரரசுக்காலத்தில் மாசி மாதத்திலும் மற்றுமொரு பிரம்மோத்ஸவம் நடைபெற்றதாகவும் தெரியவருகின்றது. இவ்வாறாக கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதிவரை வருடத்தில் பத்து பிரம்மோத்ஸவங்கள் நடைபெற்று வந்ததாக அறிய முடிகின்றது. ஆனால் காலப்போக்கில் இந்து குறுநில மன்னர்கள், நிலச்சுவான்தாரர்கள் ஆகியோரின் அரவணைப்பு குன்றிய காரணத்தாலும், முகலாய, ஆங்கிலேயர் வரவின் காரணமாகவும் பல பிரம்மோத்ஸவங்கள் நிறுத்தப்பட்டு, புரட்டாசி மாதத்தில் மட்டும் இம்

எது எவ்வாறாயினும் பல நூற்றாண்டுகளாகக் கொண்டாடப்பெற்று வரும் இப்பிரம்மோத்ஸவம் இதுபோது ஆயிரக்கணக்கான யாத்திரிகர்களை நாளும் தன்பால் ஈர்த்து வருவது மறுக்க முடியாத உண்மை. பத்துநாள் விழாவின் போது முதல்நாளன்று அங்குரார்ப்பணம எனும் நிகழ்ச்சி எவ்வித ஆடம்ப



காளிங்க மர்த்தனம்

ரமின்றிக் கடந்து விடும். அடுத்தநாள் துவஜாரோஹணம் எனும் நிகழ்ச்சி நடைபெறும். அதாவது கருடனின் திருவுரு வம் வரையப்பட்ட கொடியா னது கோயிலின் கொடிமரத் தில் (துவஜஸ்தம்பம்) ஏற்றப்ப டும். இதுபோது நன்கு அலங் கரிக்கப்பட்ட இறைவனின் உத்ஸவ மூர்த்தியான ஸ்ரீமலை யப்ப சுவாமி தன் பெண் துணைத்தெய்வங்களுடன் 'தங் கத் திருச்சி' எனும் வாகனத்தில் திருவீதிவலம் வந்து, திருமலை யில் திருமலைராயர் மண்டபத் திற்கு எழுந்தருளுவார். பின் னர் அடுத்த ஆறு நாட்களின் போது காலையிலும், மாலை யிலும் ஸ்ரீதேவி, பூதேவி சமேத உத்ஸவ மூர்த்தியானவர் பல் வேறு வாகனங்களில் எழுந் தருளி திருமலையின் நான்கு மாடவீதிகளில் திருவீதி உலா மேற்கொள்ளுவர். பிரம்மோத் ஸவ ஆரம்ப நாளன்று அதிர் வெடிகளை வெடிக்கும் பழக்கம் இருந்து வருகிறது. ஆனால் இப்பழக்கம் பிரஞ்சு, போர்ச்சுகீ சியர் , ஆங்கிலேயர் ஆகியோ ரின் இந்திய வருகைக்குப் பிற குதான் இருந்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. இப் பிரம்மோத்ஸவத்தை பிரம்மன் ஆரம்பித்து வைத்ததாகக் கரு தப்படுவதால், அதனைத் தெரி வித்திடும் வகையில் பிரம்ம ரதம் என்னும் சிறிய ரதம் ஒன்று ஒவ்வொரு வாகனத்தின் முன்னும் இழுத்துச் செல்லப் படும். இன்னன்ன நாட்களில், இந்தந்த வாகனங்கள் என்று எந்தவிதமான முறைகளோ, வரையறைகளோ இல்லை. மன் னவர்கள், புரவலர்கள், பக்தர் கள் ஆகியோர்களின் விருப் பத்திற்கு ஏற்றவாறே வாகனங் களும் பயன்படுத்தப்பட்டு வந் தன என்றே கூறவேண்டும்.

சேவையின் பெருமையைக் காட்டிட சேஷ வாகனம் எனும் பாம்புப்படுக்கை வாக னம், அன்ன உருவில் இறைவன் எழுந்தருளி அரக்கனை அழித்து அவனிடமிருந்து வேதங்க ளைப் பிரம்மனுக்கு மீட்டுக்கொ டுத்த இறைவனின் அருட்திறத் தைக் காட்டிட ஹம்ஸ வாக னம் , உலக உயிர்களின் தலை வன் எனும்படி சிங்க வாகனம், தொண்டின் சிறப்பை எடுத் துக்கூறிட அனுமன் வாகனம் ஆகிய உள்ளிட்டு மற்றும் ஸர் வபூபாலம், முத்துப்பந்தல், பல் லக்கு, குதிரை, யானை, சூரி யன். சந்திரன் ஆகிய வாக னங்களில் உத்ஸவர் எழுந்தரு ளுவார்.

இப்பிரம்மோத்ஸ வத்திற்கு சிறப்புச் சேர்ப்பன கருட சேவை மற்றும் திருத் தேர் விழாக்களாகும். உத்ஸவத் தின் ஐந்தாம் நாளன்று இறைவ னது உத்ஸவ மூர்த்தியானவர் ஸ்ரீதேவி, பூதேவி உடன் இருக்க கருடவாகனத்தில் எழுந்தருளும் காட்சி கண்ணுக்கும் கருத்துக் கும் பெருவிருந்தாக அமையும். இக்கருட சேவை அன்று உத்ஸ வர் லக்ஷ்மிஹாரம், மகர கண் டிகை எனும் விலையுயர்ந்த ஆபரணங்களால் அலங்கரிக் கப்படுவார். இவ்வாபரணங் கள் அன்று மட்டுமே கர்ப்பக் கிரகத்திலிருந்து உத்ஸவ மூர்த் திக்கு அணிவிக்க வெளிக்கொ ணரப்படும். ஸ்ரீவில்லிப்புத் தூர் ஸ்ரீஆண்டாள் கோயிலிலி ருந்து மலர்மாலைகள் கோவில் சார்பில், பக்தர்களால் நடந்தே கொணரப்பட்டு அவை கருடசே வையன்று உத்ஸவர்க்குப் அணி விக்கப்படுவது பல ஆண்டுக ளாக நடந்துவரும் நிகழ்ச்சியா கும்.



திருத்தேர்

றது என்று அறிவித்திடும் வகையில் கோயில் கொடி மரத்தில் ஏற்றப்பட்ட கருடக்கொடி கீழ் இறக்கப்படும். இதனை துவஜாவரோஹணம் என்று கூறுவர். இவ்வொன்பது நாட்களின் போது காலை முதல் இரவு வரை சமயச் சார்புடைய இசை மற்றும் கலை நிகழ்ச்சிகள் நடைபெறும்.

இவ்வாறு ஒன்பது நாட்கள் நடைபெறும் இப்பிரம்மோத்ஸவம் உண்மையில் இந்தியக் கலாச்சாரத்தின் மேன்மையினையும், திருமலைக் கோயிலின் பெருமையினையும், வேங்கடவனின் அருட்திறத்தையும் உலகிற்குக் காட்டிடும் வகையில் விளங்கி இந்து சமய உணர்வினை ஒவ்வொருவர் உள்ளத்திலும் தட்டி எழுப்பிடும் ஒரு தூண்டுகோலாக அமைந்து திகழ்வதை, இதுபோது திருமலைக்கு வருகை புரிந்து, இப்பிரம்மோத்ஸவத்தில் நேரடியாகப் பங்கேற்கும் பக்தர்களால் தான் சுய அனுபவ ரீதியாக உணர முடியும்.

இவ்வருடம் அதிக மாதம் வருவதால் இவ்வருடம் மற்றுமொரு சிறப்பு பிரம்மோத்ஸவம் திருமலையில் 9-10-91 முதல் 17-10-91 வரை கொண்டாடப்படும். ✻



திருமலையில்

அடுத்தது, இன, இட, மொழி வேறுபாடுகளை அகற்றி, இந்து சமய ஒருமைப்பாட்டுணர்வினைத் தோற்றுவித்திடும் வகையில் உத்ஸவத்தின் எட்டாம் நாளன்று காலையில் நடைபெறும் திருத்தேர்விழா அமையும். அன்று திருத்தேரினை இழுப்பதை, ஏன் தேர் வடத்தினைத் தொடுவதையும் வாழ்க்கையில் தங்களுக்குக் கிடைத்திட்ட பெரும் பேருக பக்தர்கள் கருதுவர்.

ஹனுமந்த வாகனத்தன்று மதியம், திருமலை வசந்த மண்டபத்தில் உத்சவர்க்கு வசந்தோத்ஸவம் எனும் மஞ்சள் நீர் திருமஞ்சன அபிஷேகம் நடைபெறும். ஒன்பதாவது நாளன்று காலை தீர்த்தவாரி எனும் அவப்ருத உத்சவம் நடைபெறும். இதுபோது கோயிலை அடுத்துள்ள வராக சுவாமி கோயிலின் முன் உள்ள சுவாமி புஷ்கரணி எனும் திருக்குளத்தில் ஒரு நன் முகூர்த்த நேரத்தில், பிரம்மோத்ஸவம் நன்கு நடைபெற்று முடிந்ததை அறிவித்திடும் வகையில் ஸ்ரீசுதர்சன விக்ரகம் வேதமந்திரங்கள் ஒலிக்க புஷ்கரணியில் முகிழ்த்து எடுக்கப்படும். அந்நேரத்தில் புஷ்கரணியில் மூழ்கி எழுவோரின் பாவங்கள் யாவும் மறைந்து விடும் எனக் கருதப்படுவதால், நூற்றுக்கணக்கான பக்தர்கள் இறைவனின் திருநாமங்களை விண்ணதிர அழைத்து புஷ்கரணியில் மூழ்கி எழுவர். விழா இறுதிநாளன்று, விழா இனிது முடிவுற

## சமம்

சூரிய வெளிச்சம் எங்கும் சமமாகத்தான் விழுகிறது. ஆயினும் தண்ணீர், கண்ணுடி, மெருகிட்ட உலோகம் ஆகியவற்றில் அவ்வொளி நன்கு பிரதிபலிக்கிறது. தெய்வீக ஒளியும் அப்படியே. அது எல்லாரிடத்தும் சமமாகவே பாய்கிறது. ஆயினும் தூயமனம படைத்த சாதுக்களே அவ்வொளியை நன்கு பிரதிபலிக்கிருர்கள்.

--ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

தொகுத்தவர் : கமலா மாரியப்பன் - கோவை.

# வில்லிருந்த விதுரன்

திரு. ஆர். தேவராஜ ஐயங்கார் - ஸ்ரீவில்லிபுத்தூர்

பாரத நாட்டில் இலக்கியங்கள் பல உண்டு. அவ்விலக்கியங்களிலே, இராமாயணமும் பாரதமும் காலத்தால் முற்பட்டவை. இமயம் முதல் குமரி வரை இவற்றை அறியாதார் இல்லை. இவ்விரு காவியங்களையும் இதிகாசம் எனக்கூறுவர் சான்றோர். இதிகாசம் என்பது பழைய சரித்திரம் ஒன்றைப் பல கிளைக் கதைகளைக் கொண்டு கூறுவது எனப்பொருள்படும். இவ்விரு இதிகாசங்களிலே பாரதத்தை ஐந்தாம் வேதம் என்று சிறப்பிப்பர் முன்னோர். கீதோபநிஷத்தையும் விஷ்ணு சகஸ்ர நாமத்தையும் தன்னுள் கொண்டிருப்பது இந்நூலுக்குச் சிறந்த மேம்பாடாகும். இது பற்றியே இதனை மஹாபாரதம் எனப் போற்றுவர் முன்னோர்.

பாரதம் பதினெட்டுப் பருவங்களைக் கொண்டது. இதில் ஒன்று உத்தியோக பருவம். பாண்டவருக்காக பரந்தாமன் தூது சென்ற வரலாறு இதில் பயில்கிறது. பாண்டவரகள் பதின்மூன்று ஆண்டுகள் வனவாசம் சென்று மீண்டனர். சூதினால் துரியோதனனிடத்தில் தாங்கள் இழந்த அரசை தூதினால் பெற விரும்பினர் பாண்டவர்கள். அந்தணனாகிய உலூகனை அந்தகனாகிய அரசனிடம் அவர் தூது அனுப்பினர். உலூகனும் அத்தினாபுரம் சென்று உரகக்கொடியோனிடம் பாண்டவருக்குரிய பாகத்தை வேண்டினான். ஊனக்கண்ணிழந்த தந்தையும், ஞானக்கண்ணில்லாத மைந்தனும் உலூகன் சொல்



னுக்கு இசைந்திலர. பீஷ்மர், கிருபர், துரோணர், முதலிய பெரியோர்கள் தர்மத்தை எடுத்துக் கூறியும் 'செவிடர் காதில் ஊதிய சங்காகி விட்டது'. வில்வித்தையில் வல்லவனாகிய விதுரன் எழுந்து அரசனை நோக்கி, "அரசே! பாண்டவருக்குரிய பாரினைக் கொடாவிடில் அதனைப் போரினால் பெறுவர் அவர். போர் வந்தால் நீங்கள் தோற்பது உறுதி. வீமனும், விஜயனும் போரில் உங்களை வீழ்த்திப் பெறுவர் குருநாடு" என்றான்.

விதுரன் அரசவை அமைச்சரில் முதன்மை பெற்றவன். பின் வருவதை முன் ஓர்ந்து உரைப்பவன். அகத்தூய்மையிலும் நல்லொழுக்கத்திலும், அறிவிலும் சிறந்தவன். வில் வித்தையில் வல்லவன். அவனது அறிவுரையையும் புறக்கணித்தான் அரவக்கோடியோன். தூது வந்த உலூகனையும் தூஷித்து அனுப்பினான் துரியோதனன். அந்தணனும் அவையை விட்டு அகன்று பாண்டவரிடம் நடந்ததைப் பகன்றான்.

பாண்டவர்கள் போரையும் விரும்பவில்லை. தமக்குரிய பாரை இழக்கவும் விரும்பவில்லை. சூதிலே தாம் இழந்த நாட்டைக் கண்ணபிரான் தூது சென்றால் அடைந்து விடலாம் என்று எண்ணினான் தர்ம புத்திரன். கண்ணனையே கண்ணிழந்தானிடம் தூதனுப்பத் துணிந்தான் அவன். கண்ணனும் தூது செல்ல இசைந்தான்.

பரமபுருஷனான நாராயணனின் அவதாரமே ஸ்ரீகிருஷ்ணாவதாரம். பக்தர்களைப் பாலிக்கவே, பாண்டவ தூதனாகவும், பார்த்தசாரதியாகவும், பாரதப் போர் முடிக்க அவதரித்தான் பரந்தாமன். இதனை,

"பரித்ராணாய சாதூனாம் விநாஸாய
சதுஷ்க்ருதாம்
தர்மஸம்ஸ்தாபநார்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே"

என்ற கீதா ஸ்லோகத்தினால் தர்மத்தைக் காக்கவும், அதர்மத்தைப் போக்கவும் யுகந்தோறும் நான் இப்பாரில் அவதரிக்கிறேன் என்று கார்மேக வண்ணனாகிய கண்ணனே தன் அவதாரம் பற்றிக் கூறுவது இங்குக் கருதத்தக்கது. மேலும்,

"மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார்
வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால்
நாற்றிசையும் போற்ற
தொடர்ந்தா ரணமுழங்கப்
பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத
நாவென்ன நாவே
நாராயணா வென்னாத
நாவென்ன நாவே"

என்ற சிலப்பதிகாரப்பாடலில்,

"தொடர்ந்தாரணம் முழங்க" என்ற சொற்றொடரால் வேதத்தினால் உறுதிப்பொருளாக முழங்கப்படுபவன் நாராயணனே என்றும், அவனே கண்ணனாகப் பிறந்து பஞ்சவர் தூதனானான் என்றும் தெள்ளத் தெளிய விளக்குகிறார் இளங்கோவடிகள். "தூது சென்றாய் குரு பாண்டவர்க்காயங்கோர் பொய்ச் சுற்றம் பேசிச் சென்று" சுற்றமொன்றும் இல்லாதவன் பாண்டவர்களை உறவாகக் கொண்டு பாரில் பிறந்தான், குரு குலத்தில் தோன்றிய பாண்டவர்க்காகக் குருடனிடம் தூது நடந்தான் பாரளந்த பரமன் என்று அருளிச் செய்வர் பெரியாழ்வார். எனவே சர்வலோக நாதனான திருமாலே கண்ணனாக அவதரித்தான் என்பது தெளிவு.

அஞ்சன வண்ணன் பஞ்சவர் தூதனாக அத்தினாபுரம் அடைந்தான். ஆங்கோர் அழகிய சோலையை அடைந்து தங்கினான். அந்நகர்க் காவலர் கண்ணபிரான் வரவை அரசனுக்கு அறிவித்தனர். கவுரவர் தலைவனும் கமலக் கண்ணனை கவுரவிக்கக் கருதினான். அத்தினாபுரியை அலங்கரிக்க அவன் கட்டளையிட்டான். அந்நகர் விழாக்கோலம் கொண்டு விளங்கியது. நகர மக்கள் மகர தோரணம் நாட்டினர். வாழை, கமுகு வரிசையாய்க் கட்டினர். பூரண கும்பம் பொலிவுற வைத்தனர். புதுமணல் பரப்பி, வீதியெங்கும் பூப்பந்தரிட்டனர். மங்கல வாத்தியம் எங்கும் முழங்கின. மன்னர் மன்னனான துரியோதனனும் மாயனை எதிர்கொள்ள எழுந்தான். ஆனால் சூதில் வல்ல சகுனி துரியோதனனை எதிர் கொள்ளவிடாது தடுத்தான். எனினும் தன் அரசவையில் உயர்ந்ததோர் இடத்தில் சிறந்த மேடை அமைத்து கண்ணனுக்காக அழகிய பொற்றவிசு இட்டுத் தானும் ஓர் ஆசனத்தில் அமர்ந்தான்.

பீஷ்மர் துரோணர், கிருபா, விதுரர் முதலியோர் ரத, கஜ, துரக பதாதிகள் சூழ வந்து கண்ணபிரானை வரவேற்றனர். அத்தினாபுர மக்கள் ஆரவாரம் செய்ய ஆயர்குல வேந்தன் அந்நகர வீதியில் நடந்தான். அரசனாகிய நம் அரண்மனைக்கே விருந்தினனாக அச்சுதன் வருவான் என்ற அகந்தையுடனிருந்தான் துரியோதனன். அறிவிற் சிறந்திருப்பதால நம் அகத்திற்கே அமலன் வருவான் என்று பீஷ்மர் நினைத்தார். துரோணர் தான் உயர்ந்த குலத்தில் உதித்தபடியால் தன் இல்லத்திற்கே தாமரைக் கண்ணன் விருந்திற்காக வருவான் என்ற கர்வத்துடன் இருந்தார். விதுரனோ? தான் அந்தணனுமில்லை, அரசனுமில்லை; அறிவிற் சிறந்தவனுமில்லை. அற்பனாகிய என் குடிசைக்கு எத்த குதியால் கிருஷ்ணர் எழுந்தருளுவான்? என்று தன் அறியாமையை முன்னிட்டு இருந்தான்.

விதுரர் பரம பாகவதர் அகப்பற்று புறப்பற்று முதலியவைகளை அறவே விட்டொழித்தவர். இவ்விருவகைப் பற்றையும் விட்டவரே என்றும் அழியாப் பதமாகிய வீட்டுலகம் சேர்வர் என்பதை விதுரர் நன்குணர்ந்தவர். இதுபற்றியே,

"யானென தென்னும்
செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்."

என்ற குறட்பாவால் விளக்குவர் வள்ளுவனார்.

"நீர் நுமதென்றிவை வேர் முதல் மாய்த்து" எனபர் நம்மாழ்வாரும். இத்தொடர்க்கு, "யாம் எனது என்று தம் வாக்காலே சொல்ல மாட்டாரே, நாக்கு வேம் என்று" என்ற ஈட்டு வியாக்யான ஸ்ரீசூக்தி இங்குக் கருதத்தக்கது. அதாவது, யான் எனது என்ற சொற்களைக் கூடத் தன் வாயினாலே சொல்லமாட்டார். ஏனெனில் அச்சொற்களைச் சொன்னாலே நாக்கு வெந்து விடுமாம். அதனாலேயே 'நீர் நுமது' என்று கூறுகிறுர் நம்மாழ்வார் என்பது ஈட்டின் விளக்கம். இக் கருத்துக்கிசைய, யான் எனது என்ற அகங்காரத்தை வேரொடு வெட்டி வீழ்த்தியவர் விதுரர். சர்வேஸ்வரனே எல்லாவிதமான உறவுமாவான் என்னும் பேரறிவாளர் அவர். "ஞானக் கஞ்சுக விதுரர்" என்பர் வில்லிப்புத்தூராரும். தத்வத் ஞானமாகிய கவசத்தை அணிந்தவர் என்பது இதன் பொருள். பீஷ்ம துரோணுதியர் போல அகங்கார, மமகாரம் சற்றுமில்லாத உத்தம பக்தர் என்பதை எண்ணியும், மேலும்; விதுரன் கையில் விற் பிடித்து வந்தால் அவர் முன் விஜயன் நிற்க முடியுமா? என்பது கருதியும்,

"வெற்றி விதுரன்கை வில்லிருக்க
மேதினியில்
மற்றவனை வெற்றிகொள்ளு
மாறுண்டோ?"

(பாரத வெண்பா)

என்று தர்மபுத்திரன் பயந்த நிலைக்குப் பரிகாரம் தேடவும், வில்வித்தையிற் சிறந்த விதுரன் எதிர்பக்கத்தில் வந்து போர் செய்து, பாண்டவர்களை வெற்றியடைய விடாமல் செய்யாதிருப்பதற்கு ஓர் உபாயத்தை உத்தேசித்தான் கண்ணன்.

உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடனிருந்தறியும் உத்தமனல்லவா கண்ணபிரான்? பீஷ்ம துரோணுதியர் எதிர்கொண்டழைக்க அத்தினாபுரம் வந்து விதுரன் மாளிகைக்கு எழுந்தருளினான் பரந்தாமன். அப்பொழுது விதுரர் உள்ளத்தில் பேருவகைக் கடல் பிரளயக் கடலாகப் பெருகியது.

"தீப்பறக்கும் சக்கரக்கை
செங்கண்மால் என்னுடைய
நாய்க்குழலி லேநுழைந்தா
னாலுயர்ந்தேன்--வாய்த்த
பிறப்பைக் கழித்தேன்
பெரும்பதம்பெற் றேனென்
றிறப்பைப் பிரித்தா னெழுந்து."

(பெருந்தேவனார் பாரதம்)

என்றவாறு தனது நிர்ஹேதுக கடாக்ஷத்தினால் செங்கண்மால் நாயேனது குழலில் நுழைந்தான். இனி, எனது பிறப்புக் கழிந்தது. இறப்பும் பிரிந்தது. பெரும் பதமும் பெற்றேன் என்று ஆனந்தம் மீதூர,

"உள்ளினா னுணர்ந் துள்ள
முருகினா னெழுந்து
துள்ளினான் விழுந்திணை
யடிசூடி னான்துயரைத்
தள்ளினான் மலர்த்தடக்
கையாற் றத்துவ வமுதை
அள்ளினான் எனக்கண்
களாலருந்தினான் அளியோன்"

(வில்லிபாரதம்)

என்று காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, கண்ணன் கமல மலரடி சூடி களிபேருவகை கொண்டான். வைத்த கண் வாங்காமல் வாசுதேவனின் வடிவழகை அள்ளிப்பருகி நின்று,

"முன்னமே துயின்றருளிய
முதுபயோ ததியோ
பன்னகர திப்பாயலோ
பச்சை யாலிலையோ
சொன்ன நால்வகைச் சுருதியோ
கருதிநீயெய்துதற்கு
என்னமா தவம் செய்ததிச்
சிறுகுடிலென்றான்"
(வில்லிபாரதம்)

'எம்பெருமானே! கருதி நீ யெய்துதற்கு இச்சிறு குடிசை பாற்கடலில்லை, பாம்பணையு மில்லை, வேதத்தால் உணரப் படும் இயல்பினை என்பதை உலகுக்குக் காட்ட நீ உறையும் வேதமுமில்லை. இக்குடிசைக்கு ஞானேந்திரியமோ, கர்மேந்திரி யமோ இல்லை. அறிவற்ற பொருளாகவுள்ள இதையும் ஒரு பொருளாக மதித்து எழுந்தருளி யதைக் காணும் போது, இது வும் பெரிய தவத்தைச் செய்தி ருக்க வேண்டும். இக்குடிசை பெற்ற பேற்றை என்னென்று சொல்வது?' என்று துதித் தான்.

"என்ன மாதவம் செய்ததிச் சிறுகுடில்" என்னுமிடத்தில் ஒரு கேள்வி எழுகிறது. அசேதனப் பொருளாகிய அழகிய குடிசை ஒன்று எப்படித் தவம் செய் திருக்க முடியும்? அதற்கு ஞானேந்திரியமோ, கர்மேந்திரி யமோ இல்லையே? எனின், வீட்டுக்கு வடிவமிருக்கிறது. குடிசை, வீடு, இல்லம், மாளிகை என்றெல்லாம் பெயரும் உண்டு. பெயரும், வடிவமும் உள்ள பொருள்கள் எல்லாவற்றிற்கும் ஆத்மாவும் உண்டு என்பது வைணவ சித்தாந்தம். அதில் ஆத்மா விருப்பது தோற்றுதிருப் பதற்குக் காரணம் மிக்க பாப பலனேயாகும்; அதனாலேயே அதனை அதிஷ்டித்திற்கும் ஆத் மாவுக்கும் ஞானம் மழுங்கியி ருக்கும் என்பது அறியத்தகும். இதனை ஒரு சான்று கொண்டு ஆராய்வோம்.

ததிபாண்டன் என்பவன் ஒரு பிரம்ம ஞானி. கிருஷ்ணன் ஆயர்பாடியிலே வளர்ந்தருளு ருகிறான். ஒரு நாள் யசோதைப் பிராட்டி கண்ணனுக்குத் தாய்ப் பால் கொடுக்கவில்லை. அதற் காக அவள் வைத்திருந்த தயிர்த் தாழியை உடைத்து உருட்டி னான். அதைக்கண்டு கோபித்த யசோதை, கோல் ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டு அவனை அடிக்க வந்தாள். கண் ணன் அவளுக்கு அகப்படாமல் ஓடி ததிபாண்டன் வீட்டுக்குள் நுழைந்து மறைந்து கொண் டான். கண்ணனைக் கண்ட ததிபாண்டன், அவன் திருவ டியைப் பிடித்துக் கொண்டு 'ஐயனே! எனக்கு மோக்ஷம் கொடுக்க வேண்டும்' என்றான். ததிபாண்டனது பக்தி திடமு டையதா? என்பதை அறியக் கண்ணனும் அவனை நோக்கி, 'அப்பா! என் காலை விடு, என் தாய் என்னை அடிக்க வருகிறாள்' என்று தாய்க் குப் பயந்தவனைப் போல பாவித்தான். ஆனாலும் ததிபாண்டனுக்கு உண்டான உண்மை உணர்வில் மாற்ற மில்லை. 'நான் இவனைக் காப் பாற்றும்படி வேண்ட, இவன் என்னை இரக்ஷகனாக நினைத் தானே! இவனது ஞானம்தான் என்னே?' என்று வியந்து 'நீ கோரிய வண்ணமே உனக்கு முக்தி அளித்தேன். இனி என் காலை விடு' என்றான் கண்ணன். ததிபாண்டனும், 'கண்ணா! எனக்கு மட்டும் மோக்ஷம் அளித்தால் போதுமா? என் வீட்டிலுள்ள இருபத்தெட்டு பேர்களுக்கும், என் தயிர்த்தா ழிக்கும் வீடுபேறு அருள வேண் டும்; இல்லையேல் உன்னை யசோதையிடம் காட்டிக்கொடுப் பேன்' என்றான். பக்த பராதீ னனான கண்ணனென்பெருமா னும் அவன் வேண்டுகோளின் படி, முக்தியருளினான். ததி பாண்டன் என்றால் தயிர்க்கல முடையவன் என்பது பொருள். அவன் மெய்யறிவுள்ள தனக் கும் தன்னை அண்டியிருக்கும் அசேதனப் பொருளான தயிர்த் தாழிக்கும் மோக்ஷம் கொடுக்கச் செய்தான். இவ்வரலாற்றை,

"சிந்திக்க நெஞ்சில்லை நாவில்லை
நாமங்கள் செப்பநின்னை
வந்திக்க மெய்யில்லை வந்திரு-
போதும் மொய்ம்மா மலர்ப்பூம்
பந்தித் தடம்புடை சூழரங்கா
ததிபாண்டனுன்னை
சந்தித்த நாள் முத்திபெற்ற
தென் தயிர்த்தாழியுமே."

என்ற திவ்யகவி பிள்ளைப்பெ ருமாள் ஐயங்கார் திருவாக்கால் உணரலாம்.

அசேதனப்பொருளாகிய தயிர்த் தாழிக்கும் சிந்திக்க நெஞ் சில்லை. நாமம் சொல்ல நாக் கில்லை; வந்திக்க மெய்யில்லை அவ்வாறிருந்தும் பரம பாகவத னாகிய ததிபாண்டனை அண்டி யிருந்ததால் பாபமிகுதியினால் பானையை அதிஷ்டித்திருந்த ஆத்மாவும் முக்தி பெற்றதென் பது இதன் திரண்ட கருத்து.

இந்த வரலாற்றினால் அசே

தனப் பொருளுக்கும் ஆத்மா வுண்டு என்பது பெறப்படுகி றது. இது பற்றியே விதுர னும், "என்ன மாதவம் செய்தது இச்சிறு குடில்" என்றான்.

இனி, பரம பக்தியோடு விது ரன் இட்ட விருந்தை பின்னை மணாளன் உண்டு உகந் தான். இவ்வாறு பயனை எதிர்பாராது பக்திப்பெருக்கால் விதுரர் அளித்த விருந்தை உண்ட கண்ணன், "விதுராந் நாநி புபுஜே சுசீநி குணவந் திச" என்று பரிசுத்தமாகவும் உகப்பாயும் இருந்தது என்று அருளிச்செய்தான். "நல்ல தோர் சோறும்" என்ற திருப் பல்லாண்டு வியாக்யானத்தில்; "நல்லதோர் சோறும்:- சோற் றுக்கு நன்மையாவது, இட்ட வன் 'இட்டோம்' என்றிருத்தல் உண்டவன் "இதுக்கென் செய் வோம்?" என்றிருத்தல் செய் யாத சோறு. அதாவது, தாய் இட புத்திரன் உண்ணும் சோற் றுக்கு இவ்விரண்டும் இல்லை. அநந்யப் ப்ரயோஜன ஸ்வாமி விஷயத்தில் இடும் சோறு எங் ஙனே இருக்குமெனில்; "விது ராந்நாநி புபுஜே சுசீநி குணவந் திச" என்னும்படி பாவனமாயும், போக்கியமாயுமிருக்கை, சுசீநி என்றது சுத்தங்களாயிருக்கை. சோற்றுக்கு சுத்தியாவது: துர் யோதனன் தன் ஐஸ்வர்யத் தைப் பற்ற அபிமானித்தான், பீஷ்மன் ஞானாதிகனென்று அபிமானித்தான், துரோணன் வர்ணத்தால் அதிகன் என்று அபிமானித்தான், இவையொன் றுமின்றிக்கே பக்தி யுபஹ்ரு தமாயிருக்கை' என்று பெரிய வாச்சான் பிள்ளை அருளிச் செய்திருப்பது இங்குக் கருதத் தக்கது.

பின்னர் விதுரர், "கருணை யங்கடலே! யாது கருதி நீ, இங்கு எழுந்தருளியது? உரைத் தருள வேண்டும்" என்றார். "ஐவர்க்குக் குருநாடு கேட்டு வந் தேன்" என்றான் கண்ணன். "துரியோதனன் அரவக்கொடி யோனாயிற்றே? அரவுக்குரிய கொடிய விஷம் அவனுக் கும் உணடே? அவன் எவ்வாறு பாகம் கொடுப்பான்?" என விதுரன் கூறவே, கண்ண னும், "அன்பினால் கொடானா கில், ஐவர் அம்பினால் பெறு வர் அரசு" என்று கூறி அன் றிரவு அங்கு கண்வளர்த்தருளி னான். கண்ணபிரான் மறு நாள் காலை எழுந்து நித்யகர் மாநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு விதுரருடன் துரி யோதனன் சபைக்கு எழுந்தரு ளினான்.

அழகு பொலிய அறிஞர்கள் சூழக் கொலுவிருந்தான் அர வக்கொடியோன். அவ்வம யம் அவைக்கு வந்த கண் ணபிரானுக்கு இருக்கை தந்து உபசரித்தபின் அரவக்கொடி யோன், 'ஆயர் தலைவ! என் அரண்மனையை விட்டு விது ரன் வீட்டில் விருந்துண்ட வாறு என்ன?' என்று வினவி னான். "அரசே! நான் ஐவர் தூதனாக வந்தவன். உன் வீட் டில் உண்டால், உண்டவீட்டுக்கு இரண்டகம் செய்தவனாவேன்" என்றான் கருமுகில் மேனியனா கிய கண்ணன்.

'அவ்வாறாயின் நீ தூது வந்த காரணம் கூறுக' எனலும், 'பதின்மூன்று வருடங்கள் உன் சொல்படி வனவாசம் செய்து வந்த பாண்டவர்க்கு அவர்க்கு ரிய பாகத்தைக் கொடுத்திடுக' என்றான் கண்ணன். 'ஈயிருக்கும் இடம் கூட யான் அவர்க்கு ஈயேன்' என்றான் சுயோதனன். அவனுரை கேட்ட கண்ணபி ரான் அங்கு விட்டு நீங்கி விது ரன் மாளிகைக்கு ஏகினான.

கண்ணன் சென்றபின் துரி யோதனன் விதுரனை நோக்கி, "என் பகைவர்க்குத் தூதனாக வந்த கண்ணனை நீ உனக் கும் பகைவன் என்று எண் ணாது அவனுக்கு விருந்திட் டனை. என் தந்தையோடு பிறந்த நீ, இன்று வரை என் னால் அளிக்கப்பெற்ற அன் னத்தை உண்ட நீ, என் னவும் என்னிடத்தில் அன்பு காட்டவில்லை. உண்டவீட்டுக் குத் துரோகம் செய்துவிட்டாய். பொருள் கொடுத்தார் மாட்டு உடலை விற்கும் போதுமகளின் புத்திரன் தானே நீ, பாண்டவ ருக்கு செல்வம் வந்தால் உனக்கு அதிக செல்வாக்கு இருக்கு மென்று எண்ணினை போலும்? தாயின் குணம் தனயனைத் தொடர்ந்தது' என்று கோபக் கனல் தெரிக்கக் கூறினான்.

உரகக்கொடியோன் உரை கேட்ட விதுரன், கண்கள் சிவக்க, உதடு துடிக்கக் கடும் கோபங் கொண்டு, 'துரியோ தனா! என்னை இவ்வாறு சொன்ன உன் வாயைக் குருதி சோர வாள் கொண்டு பிளந்து, உன் சிரசை வெட்டி வீழ்த்தியிருப்பேன். தந்தை ஒருவன் தனயன் உயிரைக் கவர்ந்தான் என்ற பழிக்குப்

பயந்து உன்னை அவ்வாறு செய்யவில்லை. இல்லையேல் என்னை நிந்தித்த நீ, இன்னும் உயிருடன் வாழ்ந்திருப்பாயோ? பாண்டவ தூதனுக்கு உதவிய தற்கு இன்று நீ, என்னை பழித் திட்டாயே? அப்பாண்டவருக்கே உதவினாலும் பழுதுண்டோ? இனிப் பல வார்த்தை பகரேன். போரில் உனக்காக வில்லெடுத் துப் போர் செய்யேன். இன்று சொன்ன சொல் என்றும் தவ றேன்' என்று வீராவேசத்துடன் எழுந்து,

**"கண்ணுதலான் றன்சிலைக்கும்**
**காகுத்தன் றன்சிலைக்கும்**
**எண்ணுங்கா நேராம்**
**எழிற்சிலையை - நண்ணி**
**வெறுத்தாங் குரைத்தான்முன்**
**வெவ்வுரையே பேசி**
**இறுத்தான் விதுரன்கையில்"**

(பெருந்தேவனார் பாரதம்)

என்ற சிறப்புமிக்க தன் கையிலிருந்த மலை போன்ற சிலையை இரண்டு துண்டாக முறித்துச் சபை நடுவே எறிந்து விட்டுத் தன் மனை புகுந்தான்.

விதுரன் வில்லிறுத்த செய் தியை அறிந்த கண்ணபிரான், விதுரனை நோக்கி, 'இந்த உல கில் இரண்டுசிலைகள் உண்டு என்று இயம்புவார்கள்; அந்த இரண்டு விற்களில் ஒன்றாகிய உனது வில்லை முறித்த கார ணம் என்னவோ?' என்று வின வினான்.

**"செல்வம் வந்துற்ற காலை**
**தெய்வமும் சிறிது பேணர்**
**சொல்வன அறிந்து சொல்லார்**
**சுற்றமும் துணையும் நோக்கர்**
**வெல்வதே நினைவதல்லால்**
**வெம்பகை வலிதென் றெண்ணர்**
**வல்வினை விளைவுமோரார்**
**மண்ணின்மேல் வாழுமாந்தர்"**

என்றவாறு செல்வச் செருக் கால், சுயோதனன் தகாத சொற் கள் பேசி என்னை ஏசி னான். அண்ணலே! உன் னையும் என்னையும் நிந்தித்து இழிவு படுத்தினான். அவனது சொற்கள் என்னைக் கனலெனச் சுட்டன. சுடுசொல் பொரு மல் என் அருசிலை இறுத் தேன்" என்று கல்லினாற் கல் மழை தடுத்த கருணை மாமுகி லான கண்ணன் கழலிணை களில் வீழ்ந்து வணங்கினான் வில்லிறுத்த விதுரன்.

இவ்வரலாற்றினால், செல் வச் செருக்கை ஒழிக்க வேண் டும்;. தான் என்ற அகந்தையை அறவே அகற்ற வேண்டும்; எல் லாம் வல்ல இறைவனிடம் பக் தியோடு வாழ்ந்து இன்புற வேண்டும் என்ற அறவுரைகள் அறியப்பெறுகின்றன.

***

## சிந்தை அள்ளும் செங்குன்றம்

ஒரு சமயம் வாயுதேவனுக்கும் ஆதிசேடனுக்கும் இடையே 'யார் வலிமை மிக்கவர்?' என்பது பற்றி கடும் போட்டி - இல்லை - கடும் போரே எழுந்தது. ஆதிசேடன் ஆவேசத் துடன் படமெடுத்து ஆடினார். மேரு மலையை நோக்கி விரைந்து ஓடினார். தனது பணமகுடங்களால் அம்மலையை இறுகப்பற்றினார். "கற்றூடியாரே! இம்மலையை இப்போது சற்று அசைத்துக் காட்டுவீர்! உம் ஆற்றலை சற்று எடுத்துக் காட்டுவீர்!" என்றார். வாயுதேவன் வெஞ்சினம் கொண்டார். மேரு மலை மீது வீறு கொண்டு மோதினார். அம்மலைச் சிகரங்கள் விண்ணில் உயர்ந்து பறந்தன. பின்னர் மண்ணில் அயர்ந்து உறைந்தன. அவைகளே இன்றைய திருச்செங்கோடு, கொடுமுடி, சென்னிமலை எனும் கொங்குநாட்டு திருத்தலங் களாகும். திருச்செங்கோடு இன்றும் பாம்பு படமெடுத்து ஆடுவது போல் காட்சி அளிக்கிறது. அர்த்தநாரீஸ்வரர் எழுந் தருளிய அரும்தலம் இது. இங்குக் கோயில் கொண்டுள்ள வேலவன் வடிவழகு வான்புகழ்கொண்டது. நவபாஷாணங்க ளால் வடிவமைக்கப்பெற்ற வெண்ணிற மூர்த்தி இவர்.

**"மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு**
**மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினிற்**
**சேலார் வயர்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ**
**நாலாயிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே"**

என்று அருணகிரியார் அகம் கனிந்துப் பாடுகிறார்.

செங்குன்றம் எனும் திருச்செங்கோடு ஒரு கற்கண்டு மலை, ஐயம் இல்லை. ஆயினும் எறும்பும் அங்குச் சென்று அம்மலை யைச் சுவைத்திட முடியுமல்லவா? சுவைத்திடுவோம் வாரீர்!

*திரு. ஆர். சுப்பராவ் - திருக்கோவலூர்.*

# திருக்கோவில் கல்வெட்டுகளில் மக்கள் கொடையும் மன்னவன் நெறியும்

திரு. கருணாசேகர் - தீவம்மாபுரம்.

கல்வெட்டுகள் என்பது நம் முன்னோர்களின் வாழ்க்கை வரலாற்றுச் செய்திகளை அழியாமல் காத்து வழங்கும் கற்பதிவேடுகளாகும். இக்கல்வெட்டுகள் ஒரு நாட்டின் அரசியல் வரலாற்றை, சமூக பண்பாட்டை, கவின் கலைகளை அறிவிக்கிற சிறந்த ஆவணங்களாகும். பொதுவாகக் கல்வெட்டுகளை 'வரலாற்றுப் பெட்டகங்கள்' எனலாம்.

இக்கல்வெட்டுகள் திருக்கோவில்களின் சுவர்களில் மிகுந்த எண்ணிக்கையில் பதிக்கப்பெற்றன. காரணம் கோவில்கள் பொதுமக்கள் அனைவரும் ஒன்று கூடுகிற ஒரு மையக் கூடமாக செயல்பட்டமையாகும். இதனால் பலரும் அச்செய்தியை அறிந்து கொள்ள வாய்ப்புக்கிட்டியது. மேலும், சமய ஒப்பந்தங்கள்படி வழிபாடுகள், திருவிழாக்கள் முதலியன நடைபெறுகிறதா என்பதனைப் பொது மக்கள் கவனிக்கவும், அது ஏதுவாகியது.

இவ்வாறு பல நன்மைகள் கருதி, திருக்கோவில்களில் பதிக்கப்பெற்ற கல்வெட்டுகள் எண்ணில. தஞ்சாவூர் மாவட்டத்தின் திருத்துறைப்பூண்டி வட்டாரத்திருக்கோவில்களில் 184 கல்வெட்டுகள் கிடைக்கப்பெற்றுள்ளன. இக்கல்வெட்டுகளில் ஐந்து மட்டும் இங்கு எடுத்தாளப்பெற்றுள்ளன. இக்கல்வெட்டுகளில் திருக்கோவில்களுக்குப் பலரும் இறையிலியாக நிலம் அளித்தமையும் அந்நிலங்கள் அளிக்கப்பெற்றதின் நோக்கமும், நிலம் அளித்தோரின் நோக்கம் கெடாமல் அந்நிலங்களைக் காப்பாற்ற மன்னர்கள் எடுத்த நடவடிக்கைகளையும் அதற்கு அவர்கள் அளித்த முதன்மையும் இங்குச் செய்தியாகக் கொள்ளப்பெற்றுள்ளன.

இரண்டாம் இராசேந்திர சோழன் காலத்தில் (கி.பி. 11) காஸ்யபன் எனும் வைத்தியனுக்கு 'வைத்தியக் காணிக்கையாக' நிலம் அளிக்கப்பட்டது. இதனைச் செல்லாது என ஊர்ச் சபையார் அபகரித்துக் கொள்கின்றனர். அவ்வைத்தியன சமூக வழக்கப்படி சபையாருககு விண்ணப்பம் செய்கிறான். களப்பாள் சபையார் கீரக்களூர் ஸ்ரீபுருஷோத்தம தேவர் அவ்வழக்கை விசாரணைக்கு எடுத்துக் கொள்கிறார்.

அவ் வழக்கில் பரசுராமன் என்பவன் 'வைத்தியனுக்குப் பயிர் செய்ய நிலம் அளிக்கப்பட்டிருந்தது உண்மை, எனச் சாட்சியம் அளிக்கின்றான். சபையார் அவ்வழக்கைத் தீர ஆய்ந்து, வைத்தியனான காஸ்யபனுக்கு நிலத்தைத் திரும்ப வழங்குகின்றனர். இச்செய்தி கீரக்களூர் அகத்தீசுவரர்த் திருக்கோயிலில் (த.நா.தொ.து. 1976/76) இடம் பெற்றுள்ளது.

இக்கல்வெட்டின்வழி நான்கு செய்திகள் தெரிய வருகின்றன. 1) கோவிலில் வைத்தியம் (மருத்துவம்) செய்பவருக்கு 'வைத்தியக்காணி' என்ற பெயரில் நிலம் அளிக்கப்பட்டுள்ளது. 2) சாதாரண மனிதன் தனக்கு ஏற்படும் அநீதிகளைத் தெரிவிக்க வாய்ப்பிருந்தமை. 3) வழக்கு நியாயமானது எனத் தெரிந்தபின் முறையாக நிலங்களைத் திரும்ப வழங்கியமை. 4) திருக்கோவிலில் பணிபுரியும் ஊழியனது நலம் பாதுகாக்கப் பட்டமை.

அடுத்து, திருக்கொள்ளிக்காடு அக்னீசுவரர்க் கோவில் இடம் பெற்றுள்ள கல்வெட்டொன்றில் (த.நா.தொ.து. 1976/122) காணப்படும செய்தியாவது : திருக்கொள்ளிக்காட்டிலுள்ள சிலர் கோவில் நிலத்தை உத்தம சோழனின் மூன்றும் ஆட்சியாண்டு முதல் இராசேந்திர சோழனின் இருபத்து மூன்றும் ஆட்சி ஆண்டு வரை அனுபவித்து வந்தனர். கோவில் நிர்வாகிகள் (மாகேசுவரர்) முதல் இராசேந்திரனிடம் இவ்வழக்கைக் கொண்டு செல்

கின்றனர். மன்னன், அதிகாரி ஸ்ரீஇராசேந்திர சோழ மூவேந்த வேளானை அழைத்து, அதனை விசாரிக்குமாறு கூறுகிறான். மூவேந்த வேளான் மாகேசுவரர் உள்ளிட்ட அனைவரையும் அழைத்து விசாரித்தான். சிலர் கோவில் நிலத்தை அரசாங்கத்திற்குத் தெரியாமல் அனுபவித்து வந்தது உண்மை எனத்தெரிய வருகிறது.

இதனால் அவர்களைத் தண்டிக்கிறான். தண்டமாக முன்பிருந்த இருநூறுகளை இரட்டித்து நானூறு காசுகளாகச் செலுத்த வேண்டும் என ஆணையிடுகிறான். அவர்கள் அக்காசிற்குப் பதிலாக அந்நிலத்தையே இறையிலி செய்து கொடுத்துவிடுவதாக வேண்டிக்கொள்ள, அவ்வாறு இறையிலியாகப் பெற்ற செய்தியை மேற்கண்ட கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

இக்கோவில் கல்வெட்டு வழி பல செயதிகள அறிய முடிகிறது. 1) கோவில் நிலததைக் கோவில் நிர்வாகத்திறகுத் தெரியாமல் பல ஆண்டுகள் சிலர் அனுபவித்து வந்திருந்தமை. 2) மன்னனின் அதிகாரி இதனை உடன் விசாரித்து தண்டம் வழுங்கி, கோவில் சொத்தை மீண்டும் கோவிலுக்கே திருப்பியமை. 3) நிர்வாகத்திற்குத் தெரியாமல் கோவில் சொத்தைப் பயன்படுத்தியமையால் தண்டனை இருமடங்காக அளிக்கப்பட்டமை. 4) திருக்கோவில் சொத்துக்கள் ஒழுங்குப் படுத்தப்பட வேணடும் என்ற மன்னனது எணணம், அவன் தனி அதிகாரி அமைக்தமையால் புலப்படுகிறது.

இது போன்ற ஒரு நிகழ்வை திருத்துறைப்பூண்டி அருள்மிகு பிறவி மருந்தீசுவரர் கோவில் கல்வெட்டிலும் (த.நா.தொ.ஆ. 1976/138) காணமுடிகிறது. பொதுமக்கள் அன்றி நிர்வாகத்திலுள்ள கோவில் நிர்வாகிகள, கணக்கெழுதுவோர் ஆகியோர் கோவிலின் சொத்தைத் தவறாகவும் அதிகமாகவும் செலவு செய்தலைத் தடுத்தலோடு அவ்வாறு செய்தவர்களுக்குத் தண்டனை அளிக்கப்பெற்றமையையும் கூறுகிறது. இச்செய்தியின் வழி திருக்கோவில் சொத்துக்களைத் தவறாகப் பயன்படுத்துவோர் யாராக இருந்தாலும அவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்பெற்றமையை அறியமுடிகிறது.

இத்திருக்கோவிலிலுள்ள பிறிதொரு கல்வெட்டில்(ARE 471 of 1912) திருச்சிற்றம்பலமுடைய நாயனார் எனனும் சிவாசசாரியாருககுக குகை (மடம்) யொன்று தோற்றுவித்ததைக் குறிக்கிறது. இக்குகையைக் காண வருவோருக்கு உணவும், தங்குமிடமும் அளிக்க நிலமும அளிக்கப்பட்டிருந்தது. இச்செய்தி திருககோவிலின் வழி மக்கள் நிகழ்த்திய தர்ம சிநதனையும் சமய உணர்வையும அறிய முடிகிறது. பின்னர ஏற்பட்ட 'சமயக கலகம்' ஒன்றில் அம்மடத்தின் சொததுக்கள் பறித்துக் கொள்ளப்பட்டன.

வடகாடு கோவிலூரில் உள்ள கல்வெட்டில் (ARE 187 of 1908) கோவில் தேவரடியார்கள் 14 பேர் விளக்கெரிக்கக காசு தானமாகக் கொடுத்த செய்தி தெரிவிக்கப்படுகிறது. இவ்வொப்பந்தத்தில் மாறுபட்டால் மாறுபடுவோரது சுகதுக்கங்களில் பிறர் பங்கு கொள்ளல் கூடாது என அவர்கள் எடுத்துக் கொண்ட முடிவையும் அறிய முடிகிறது. இதனால் கோவில் வழிபாடுகளில் அவர்களுக்கிருந்த ஈடுபாடும், அதைக்காப்பாற்ற அவர்கள் எடுத்துக்கொண்ட கட்டுணர்வும் அறிதொறும் வியப்பளிப்பன.

மேற்கண்ட ஐந்து கல்வெட்டுக்களின் வழி கோவில் சொத்துக்களைத் தவறாகப் பயன்படுத்துதல் புதிதல்ல என்றாலும், அக்காலத்தில் விளங்கிய அரசனும், அரசு அதிகாரிகளும் அதனைக் கண்டு வாளா இருந்து விடாது அதனை நெறிப்படுத்தி, கோவில் சொத்துக்களை முறைப்படுத்தியுள்ளனர் என்பது எண்ணுதறகுரியது கோவிலின் சிறப்புககும் அதன் வளர்ச்சிக்கும் கொடைகள் இன்றியமையாதன என்பதை மனனன் முதல் மக்கள் வரை உணர்ந்து செயல்பட்டுள்ளனர். கோவில் சொத்துக்களைத் தவறாகப் பயன்படுத்துவதில்லை என மககள் தமக்குள்ளேயே ஒரு தீரமானமான முடிவு எடுத்திருந்தமை சிந்திக்கத்தக்கது. இதனால் அன்றைய சமூகம ஒரு விழுமிய நிலையை, சிறந்த ஆன்மீகப் பண்பாட்டை, அறக்கோட்பாட்டைக் கொண்டிருந்தமை தெளிவாகிறது. இச்செய்திகள் இன்றைய திருக்கோவில்களின் நிலையோடு ஒப்பிட்டுக் காண உதவும் பாங்குடையன. *

# மகாபாரதத்தில் ஐந்தின் பெருமை

திரு. எம்.எஸ். பிச்சுமணி - சென்னை.

இதிகாசம் இரண்டில் "மகா பாரதம்" என்ற பெரும் கதையான்து "வியாச முனி" சொல்லி "விநாயகர்" உதவியுடன் எழுதப்பட்டது.

கிருஷ்ணபெருமான் பாண்டவர் என்று புகழ் பெற்று வந்த ஐவருக்கும் எப்போதும் உதவி புரிந்து வந்தார்.

தங்களது திருக்கரங்களில் தற்போது தவழ்ந்து கொண்டிருக்கும் "ஸப்தகிரி" இதழில் மாபாரதத்தில் - வியாசமுனி. வரிசையாகக் காட்டி வரும் "ஐந்து" என்ற எண்ணின் பெருமையை எவ்வாறு காட்டுகிறுர் என்பதை இனிப் பார்ப்போம்.

1. மனைவி - மக்கள் - பணியாட்கள் - நண்பர்கள் - மற்றும் சகோதரர்கள் ஆகிய ஐவர் இடங்களிலும் "கோபம் உள்ளவர்கள்" தொடர்பு வைத்துக் கொள்ளக்கூடாது என்று கதை ஆரம்பத்திலேயே கோடிட்டுக் காண்பிக்கின்ருர்.

2. விளையாட்டாகவும், பெண்களிடத்திலும், திருமணக் காலத்திலும், உயிருக்கு ஆபத்து ஏற்படும் காலத்திலும், சொத்து பறிபோகும் காலத்திலும் ஆகிய ஐந்து வித நேரங்களிலும் பொய் சொல்லலாம் என்பதையும் காட்டுகின்ருர்.

3. யயாதி மன்னனுக்கு - யது, துர்வசு, திருகயு, அனு, பூரு என்ற ஐந்து குழந்தைகள் பிறந்தன.

4. ஊமையன், குருடன், செவிடன், நோயுற்றவன், கடமை தவறியவன் ஆகிய ஐந்து பேர்களும் முதலில் பிறந்தாலும் தலைமகன் ஆக முடியாது.

5. அம்பை தஞ்சம் புக ஐந்து ஆண்டுகள் அலைந்தாள்.

6. பாண்டுவுக்கு ஐந்து திருக்குமாரர்கள் பிறந்தார்கள்.

7. அரச்சுனன் முதன்முதலாக ஐந்து அம்புகளைத்தொடுத்து ஒரு முதலையைக் கொன்ருன்.

8. வில் வித்தை, ஒழுக்கம், பண்பு, அறிவு, ஞானம் ஆகிய ஐந்திலும் அர்ச்சுனன் மிகச் சிறந்தவன்.

9. மற்ருெரு சமயம் அர்ச்சுனன் ஒரே சமயத்தில் ஐந்து அம்புகளைத் தொடுத்து இரும்புப் பன்றியின் வாயை அடைத்தான்.

10. அரக்கு மாளிகையில் குந்திக்கு ஐந்து பிள்ளைகளைப் பெற்ற தாயை உதவிக்கு வைத்திருந்தார்கள்.

11. அரக்கு, சணல், குங்கிலியம், கொழுப்பு, மெழுகு போன்ற ஐந்துவிதப்பொருள்களால் வாரணுவத்தில் அரக்கு மாளிகை கட்டப்பட்டது.

12. திரௌபதி சுயம்வரத்தில் ஒரே துவாரத்தின் வழியாக ஐந்து அம்புகளை ஒரே சமயத்தில் செலுத்த வேண்டும் என்பது போட்டியின் நிபந்தனை.

13. நளாயினி என்ற திரௌபதி முன்பொரு சமயம் சங்கரரிடம் ஐந்து முறை கணவன் வேண்டும் என்று முறையிட்டாள். ஆகவேதான் திரௌபதிக்கு ஐந்து கணவர்கள் பாண்டவர்களாக வந்தார்கள்.

14. ஒரு சமயம் குந்தியானவள் பாண்டவர்களிடம் நீங்கள் கொண்டு வந்த கனியை (கன்னி) ஐவரும் எடுத்துக் கொள்ளுங்கள் என்ருள்.

15. தென் சமுத்திரக்கரையில் இருந்த ஸௌபத்திரம், அகஸ்தியம், பௌமலோகம், காரந்தமம், பரத்வாஜம் என்ற ஐந்து தீர்த்தங்களில் அர்ச்சுனன் நீராடச்சென்ருன்.

16. அப்போது அந்த தீர்த்தங்களில் சாபத்தைப் பெற்ற ஐந்து முதலைகள் சாப விமோசனம் பெற்று தங்கள் லோகங்களுக்குச் சென்றன.

17. சுபத்திரையின் கல்யாணத்திற்கு கண்ணன், அக்ரூவர், வசுதேவர், தேவகி, சுதன் ஆகிய ஐந்து பேர்கள் மட்டுமே போய்வந்தார்கள்.

18. திரௌபதிக்கு பிரதிவிந்தயன், சுதசோமன், சிருத்வர்மா, சதாநீகன், கிருதசேனன் என்ற ஐந்து திருக்குமாரரகள் பிறந்தார்கள்.

19. நாரதமுனி தர்மனுக்கு யமசபை, வருண சபை, குபேரசபை, பிரம்மசபை, இந்திர சபை ஆகிய ஐந்து சபைகளைப் பற்றி விரிவாக விளக்கிக் கூறினார்.

20. ஒரு கண், ஒரு கால், ஒரு கை, அரை முகம், அரை வயிறு ஆகிய ஐந்து பாகங்களுடன் கூடிய பிண்டமாக ஜராசந்தன் பிறந்தான்.

21. ஐந்து மலைகள் சூழப்பட்ட நகரைத் தான் ஜராசந்தன் ஆண்டு வந்தான்.

22. சக்ரவாகம், வாத்து, நீர்க்காக்கை, கடல் காக்கை, மற்றும் நீர்க்கோழி ஆகிய ஐந்து பறவையினங்கள் வாழும் சோழநாட்டிற்கு பாண்டவர்கள்.

23. செங்கழுநீர், குவளை, செவ்வல்லி, ஆம்பல், தாமரை போன்ற ஐந்து வகையான மலர்கள் பூத்துக் குலுங்கிய நேரத்தில் தான் பாண்டவர்கள் திக் விஜயம் செய்தார்கள்.

24. ராஜசூய யாகம் நடத்த கோசலம், காசி, மகதம், வங்கம், மிலேச்சம் என்ற ஐந்து நாடுகளைப் பாண்டவர்கள் வெற்றி கொண்டார்கள்.

25. வியாசர், சுசர்மா, யக்ஞவல்கியர், பைவர், தௌமியர் ஆகிய ஐந்து ரிஷிகளும் ராஜ சூயயாகத்தில் கலந்து கொண்டார்கள்.

26. பெண்கள், பசுக்கள், அந்தணர்கள், அன்னமிட்டவர்கள், அடைக்கலம் புகுந்தவர்கள் ஆகிய ஐந்து பேர்களிடம் ஆயுதப்பிரயோகம் செய்யக்கூடாது.

27. ஆறு அங்கங்கள் தெரியாதவன், கேள்வி ஞானம் தெரியாதவன், நியமம் தவறியவன், பாபி, கற்பிக்கும் தகுதியற்றவன் ஆகிய ஐந்தும் தெரியாதவன் யாகத்தை நடத்த தகுதியற்றவன் ஆவான்.

28. "சூதாட்டம்" என்ற ஐந்தெழுத்துக் கொண்ட விளையாட்டை பாண்டவர்கள் விளையாடினார்கள்.

29. சூதாட்டத்தில் ஒருபுறம் பீஷ்மர், துரோணர், கர்ணன், கிருபர், அசுவத்தாமர் ஆகிய ஐவரும், துரியோதனன், சோமதத்தன், சகுனி, துச்சாதனன், ஜயத்ரதன் ஆகிய ஐவர் மறுபுறமும், இவர்களுக்கு எதிரில் பஞ்ச பாண்டவர்களும் அமர்ந்திருந்தார்கள்.

30. பாகலீகன், சோமதத்தன், சஞ்சயன், அசுவத்தாமன், யுயுத்சு ஆகிய ஐவரும் சூதாட்ட இறுதியில் தலைகுனிந்தார்கள்.

31. வேட்டை, கள், சூதாட்டம், சிற்றின்பம், அடுத்த நாட்டின்மீது படையெடுப்பு ஆகிய ஐந்தும் அரசாள்பவருக்குத் துன்பத்தைத் தருபவையாகும்.

32. பீஷ்மர், துரோணர், அசுவத்தாமர், கிருபர், கர்ணன் ஆகிய ஐவரும் எப்பொழுதும் துரியோதனனுக்கு உதவியாக இருந்து வந்தார்கள்.

33. பாஞ்ச சன்யம், பஞ்சாயுதம் தரித்த கிருஷ்ணன் பாண்டவர்களுக்கு எப்போதும் உதவியாக இருந்து வந்தார்.

34. "பாசுபதம்" பெற ஐந்து வருடங்கள் வரை இந்திர லோகத்தில் அர்ச்சுனன் தங்கி இருந்தான்.

35. ஆர்ஷ்டிசேனர் ஆச்ரமத்தில் இருந்த ஐந்து நிறங்கொண்ட மலரை திரௌபதி விரும்பினாள்.

36. தர்மராஜனைப் பார்த்துக் கேள்வி கேட்ட நகுஷன் என்ற மலைப்பாம்பு, சந்திர வம்சத்தில் பிறந்த "ஆயு" என்பவரின் ஐந்தாம் தலை முறையாகும்.

37. கெட்ட சொல் சொல்லக்கூடாது, கெட்ட சொல் சொல்லும் இடத்தில் இருக்கக்கூடாது, கெட்டவர்களைப் பார்க்கக்கூடாது, கெட்டவர்களுடன் உட்காரக்கூடாது, கெட்டவர்களுடன் போகக்கூடாது. ஆகிய ஐந்தையும் கடைப்பிடித்தால் கண்ணனை எளிதில் அடையலாம் என்று திரௌபதி - சத்யபாமாவுக்குச் சொல்லுகிறாள்.

38. பூமி வெடிக்கட்டும், ஆகாயம் உதிரட்டும், சூரியன், சந்திரன் ஒளியிழக்கட்டும், நெருப்பு தன் வேட்கையை இழக்கட்டும், சமுத்திரத்தில் உள்ள நீர் வற்றட்டும், ஆனால் பாண்டவர்களுக்கு மட்டும் நாம் இடம் கொடுக்கக்கூடாது என்று துச்சாதனன் கத்துகிறான்.

39. ஜயத்ரதன் என்பவனை பீமன் வெற்றி கொண்டு - அவன் தலையில் ஐந்து குடுமிகளை உண்டாக்கித் தெருவில் அலைய விட்டான்.

40. ஜயன், ஜயேசன, விஜயன், ஜயத்சேனன், ஜயத்பாலன் என்ற ஐந்து பெயர்களுடன் பஞ்சபாண்டவர்கள் தலைமறைவாக வாழ்ந்து வந்தார்கள்.

41. துருபதன், கிருஷ்ணன், பலராமன், வசுதேவர், சாத்யகி ஆகிய ஐவரின் முன்னிலையில்தான் அபிமன்யுவின் திருமணம் நடந்தது.

42. சல்லியன், பசுதத்தன், உக்கிரமன், கிருதவர்மன், அந்தகன் ஆகிய ஐவரும் பாண்டவர்களுக்கு முதலில் உதவிபுரிந்தவர்கள்.

43. திரௌபதியை விரும்பிய கீசகனைப் பார்த்து தன்னை எப்போதும் ஐந்து கந்தர்வர்கள் காப்பாற்றி வருகிறார்கள் என்று பயமுறுத்திவந்தாள்.

44. அகங்காரம், அதிகப்பேச்சு, அதிக கோபம், தன்சுயநலன், நண்பனுக்குத் துரோகம் ஆகிய ஐந்தும் மனிதனை வாழச்செய்யாது என்று விதுரர் எடுத்துச் சொல்கிறார்.

45. விருகத்தலம், அவித்தலம், மாகந்தி - வாரணவதம், அத்துடன் நீங்களாகக் கொடுக்கும் ஒரு ஊர் ஆகிய ஐந்து ஊர்களையாவது பாண்டவருக்குக் கொடுங்கள் என்று கண்ணன் கௌரவர்களிடம் கேட்கின்றான்.

46. துர்யோதனன் ஒரு மூடன், அடக்கமற்றவன், கர்வி, நன்றி மறப்பவன், பெரியோர் சொல்லைப் புறக்கணிப்பவன் ஆகிய ஐந்து செயல்களைக் கொண்டபடியால் அவனிடம் நாம் வந்திருக்கக் கூடாது என்று விதுரர், கண்ணனிடம் கூறுகிறார்.

47. கண்ணனை - தேவர், அசுரர், மனிதர், கந்தர்வர், நாகர் ஆகிய ஐந்து பேர்களாலும் எளிதில் அடைய முடியாது. நீ எப்படி அடைய முடியும் என்று துரியோதனனைப் பார்த்து திருதிராஷ்டிரன் கேட்கின்றார்.

48. பீஷ்மர், துரோணர், விதுரர், சஞ்சயன், திருதிராஷ்டிரன் ஆகிய ஐவருக்குத்தான் கிருஷ்ணனின் விசுவரூப தரிசனம் கிடைத்தது.

49. ஹே! துரியோதனா! நான் தனியாக வந்திருப்பதாக நினைத்து என்னைப் பிடிக்கத் திட்டமிட்டாய். ஆனால் என்னுடன் எப்பொழுதும் அந்தகர்கள், விருஷ்ணிகள், ஆதித்யர்கள், ருத்திரர்கள், வசுக்கள் ஆகிய ஐவகைக் கூட்டங்களும் இருந்து வருகின்றன' என்றான் கிருஷ்ணன்.

50. உலூகன் தூது போன சமயம், யுதிஷ்ட்டிரர், துருபதன், கோவிந்தர், விராடன், மச்சநாட்டு மன்னன் ஆகிய ஐவரே ஒன்று சேர்ந்திருந்தார்கள்.

(அடுத்த இதழில் முடியும்)



# திருமலை வைபவம்

திருமதி. கே. தேவகி பிரகாசம் - திருப்பதி

ஒவ்வொரு நாளும் கிட்டத் தட்ட முப்பதினாயிரம் குரல்கள் 'கோவிந்தா... கோவிந்தா' என்று விளித்து, தங்கள் வேதனைகளைக் கூறி, திருமலைத் தேவனிடம் முறையிடுகின்றன. அவற்றைச் செவி சாய்த்து, உடனுக்குடன் தன் பேரருளால் தீர்த்து வைக்கிறான். அத்திரு வேங்கட முடையான் - ஒவ்வொருவரையும் வியப்பில் ஆழ்த்தியவாறு.

பக்த கோடிகள் பலவிதம். அவர்களுடைய வாழ்க்கைப் பிரச்சனைகளும் வெவ்வேறானவை. ஒன்றிற்கொன்று முரண்பாடுகள் நிறைந்தவை. ஒருவரின் வளர்ச்சி மற்றொருவரின் தளர்ச்சி; ஒருவரின் லாபம், மற்றொருவரின் நஷ்டம்; சிலருடைய வெற்றி, பலருடைய தோல்வியில் பொதிந்துள்ளது. ஆனால் ஒருவரை உயர்த்தி, மற்றவர்களைத் தாழ்த்தித் தள்ளிவிடாமல் ஒவ்வொருவரின் வேதனையையும் நொடியில் களைகிறான் திருவேங்கடத்தான்.

அவர்களில் ஒருத்தி - குணபபடுத்த முடியாத கொடிய நோய்க்குள்ளானவள். பிரபல மருத்துவர்களால் கூடக் கைவிடப்பட்டவள். கடைசி சில நாட்களே வாழ இதயத்துடிப்புள்ளவளாகக் கருதப்பட்டவள். தன் நிலவுலக வாழ்க்கைப் பயணத்தின் இறுதிக் கட்டத்தில் ஒருமுறை வேங்கட நாராயணனைத் தரிசனம் செய்து விட்டு விடை பெற வருகிறாள். நிம்மதியாகத் தன் வீடு திரும்புகிறாள், நோய் முற்றிலும் குணமடைந்து!

மற்றொருத்தி விமான விபத்தில் சிக்கிக் கொண்டவள்! பாராசூட்டிலிருந்து கீழே குதிக்குமுன் தன்னையறியாமல் 'வேங்கடரமணா சங்கடஹரணா' என்று முணுமுணுத்தது மட்டுமே அவள் நினைவில் நின்றது. மயங்கி விழுந்தவள், நினைவு மீண்ட பொழுது, ஒரு மரக்கிளையில் பூங்காற்று மெல்லத் தாலாட்ட பாராச்சூட் ஊஞ்சலில் மெல்ல ஆடிக் கொண்டிருந்தாள், எதுவுமே நேராதது போல.

ஒரு விலையுயர்ந்த வைரம் பதித்த பொன் மோதிரத்தை ஒரு பெருஞ்செல்வர் பெறுகிறார். ஏனோ அகாரணமாக அந்த மோதிர விரலில் எரிச்சல் ஏற்படுகிறது. வலி தணிய வேண்டி, அவர் வேங்கடநாதனைப் பிரார்த்தித்துக் கொள்ளுகிறார். அம் மோதிரத்தை உண்டியில் சமர்ப்பித்து விடுவதாக. நொடியில் வலி மறைகிறது! ஆனால் வைர மோதிரத்தை இழக்க விரும்பாமல் அதற்கு ஈடான தொகையை மட்டும் கணக்கிட்டுக் காணிக்கையாகச் செலுத்த விரும்புகிறார் அந்த தனவான். அத்தொகையை அவர் திருமலை உண்டியலில் சமர்ப்பிக்கும் பொழுது, அவர் விரலில் அணிந்திருந்த விலையுயர்ந்த வைர மோதிரமும் நழுவி உண்டியலில் விழுந்து விடுகிறது!

### ஒரு பிரசித்தி பெற்ற நிகழ்ச்சி

இசைப் பேரரசரான தியாகராஜர் திருமலைக் கோயிலின் தங்கவாசல் மூடிக்கிடந்த பொழுது வந்தடைகிறார். சன்னிதிக் கதவுகள் உட்புறமிருந்து சாத்தப்பட்டு, நிவேதனங்கள் நடைபெறுகிற சமயம் அது. இறைவனைக் காணத் துடித்த ஞானியின் நெஞ்சம் விம்மிற்று.

"தெர தீயக ராதா.."

('திரைவிலக்க மாட்டாயா...')

ஒரு கணம் அவர் இப்பாடலைப் பாடி முடிப்பதற்கு முன், கனமான திரைகள் விலகிக் கொள்ளுகின்றன. மெய் சிலிர்க்க உணர்ச்சி மேலிட்டு அவர் பாடுகிறார்.

"ஏனாட்டி நோமு பலமோ..."

(இந்தப் பாக்கியத்தைப் பெற என்று தவம் செய்தேனோ?...)

சரித்திரக் காலத்திற்கும் முன்பாகப் பல ஆயிரம் நூற்றாண்டுகளாக - வேத காலம் முதல் 'ஸ்ரீவேங்கடேச ஸமோ தேவோ ந பூதோ ந பவிஷ்யதி' (திருவேங்கடவனுக்கு ஒப்பாக வேறு ஒரு தெய்வம் முன்னர் தோன்றியதில்லை; இனி தோன்றப் போவதில்லை') என்று பக்த கோடிகளால் போற்றப்பட்டவர். பன்னிரு புராணங்கள் ஒரு மித்துக் கூறும் கருத்தும் இதுவே.

"குன்றமேந்திக் குளிர் மழை காத்தவன்

*அன்று ஞாலமளந்த பிரான்-பரன்
சென்று சேர் திருவேங்கடமாமலை
ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே"*

என்று இத்திருவேங்கடத்தில் எழுந்தருளி இருப்பவர் மூவுலகும் ஈரடியால் அளந்த அந்தப் பரமனே என்று நம்மாழ்வார் தன் திவ்விய திருஷ்டியால் சேவித்துப் பாடியிருக்கிறார். திருவேங்கடமுடையான் சாக்ஷாத் பரம் பொருள் என்ற தன் ஆத்மானுபவத்தினை உலகோர் அறிய வெளியிட்டுள்ளார்.

**பரம்பொருளின் இலக்கணம்**

எங்கும் பரந்தும் என்றும் நிலைத்தும் உள்ள பொருளையே 'பரம்பொருள்' என்று குறிப்பிடுவர். அப்பொருள் எல்லாவற்றையும் கடந்தும், எல்லாவற்றிலும் உட்கலந்தும் இருப்பதனால் 'கடவுள்' (கடந்து, உள் நிற்பது) என்று வழங்கினர் நம் தமிழர். (விஷ்ணு என்னும் சொல்லும் வியாப்னோதி இதி விஷ்ணு) எங்கும் நிறைந்தவன் என்னும் பொருளிலேயே வழங்கப்படுகிறது.

அண்ட சராசரங்கள் அனைத்திலும் வியாபித்த இறைவன் தம் பேராற்றல்கள் எல்லாம் ஒருங்கிணைந்து அருள் தர நிற்பது திருவேங்கடம் என்கிறார் நம்மாழ்வார்.

'ஸர்வத்ர வஸதி இதி வாசுதேவ' என்று நீக்க மற எங்கும் நிறைந்த ஸ்ரீமன் நாராயணனை 'பரம்', 'வ்யூகம்', 'விபவம்', 'அந்தர்யாமி', 'அர்ச்சை' ஆகிய ஐந்து நிலைகளிலே நம் ரிஷிகள் சேவித்தனர்.

**பரம்**

பரமபதம் என்னும் நித்திய விபூதியில் ஆதியஞ்சோதியாக நித்திய சூரிகளுடன் எழுந்தருளியிருக்கும் நிலை.

பரம பதம் முக்தர்களால் மட்டுமே முடிவாகச் சென்றடையக் கூடிய பேரண்டம். இது காலமற்ற, என்றுமுள திருநாடு. இதற்கு மாறாக, காலவரையறைக்குட்பட்டு, மன்வந்த்ரம் - பிரளயங்களால் மாற்றங்களுடையது நம் ஈரேழு பதினான்கு புவனங்கள் அடங்கிய லீலா விபூதி. இதன் விளக்கத்தைப் பரமபதசோபான படத்திலும் காணலாம். கீழே கூறப்படும் நான்கு இறைநிலைகளும் லீலா விபூதியில் சேவிக்கக் கூடியவை.

**வ்யூகம்**

லீலா விபூதியில் மேல்தளமாகிய சத்திய லோகத்தில் வைகுண்டம் என்னும் திருப்பாற்கடல் அமைந்துள்ளது. பரமபதநாதனைப் போலவே சங்கர்ஷண (சிருஷ்டி) மூர்த்திகளாக விளங்கும் நிலை. பக்தர்கள் தம் தவ வலிமையால் திருப்பாற்கடல் நாதனைச் சென்று சேவித்து விட்டு வரலாம். பிருகு மஹரிஷி (திருவேங்கடாஜல மஹாத்மியத்தில் அவதாரிகையாக அமைந்த நிகழ்ச்சி) திருமாலை இந்த க்ஷீராப்தியில் தான் சென்று சேவித்தார்.

**விபவம்**

நல்லோரைக் காத்து, அல்லோரை வீழ்த்தப் பரமன் நிலவுலகில் தோன்றும் அவதாரங்களை விபவம் என்பர். இவை ஒவ்வொரு யுகத்திலும் நிகழ்ந்து கொண்டே இருப்பவை என்று கீதாச்சாரியன் கூறுகிறார். ராமகிருஷ்ணாதி தசாவதாரங்களைத் தவிர சில தற்காலிக ஆவேச அவதாரங்களும் உண்டு. வியாச முனிவர் மேல் ஆவேசித்து 'மாபாரதம்' எழுதியதால் 'வியாசாய விஷ்ணு ரூபாய' என்று கூறப்படுகிறது.

**அந்தர்யாமித்வம்**

ஒவ்வொரு ஆன்மாவின் உள்ளிருந்து கொண்டு சகல ஜீவர்களின் வளர்ச்சி தளர்ச்சிகளைக் கண்காணித்துக் கொண்டிருக்கும் நிலை. யோகிகள் தியானத்தில் சிரமத்துடன் அந்தர்யாமியான பரமனை 'லக்ஷ்மி சகிதனாய் விலக்ஷண விக்கிரஹமாய் சயனித்துக் கொண்டிருக்கும் நிலையில்' சேவித்தனர். அந்தச் சயனித்துக் கொண்டிருக்கும் சேவையைப் பின்னர் 'திருவரங்கம்' என்று பெயரிட்டு (திரு - தெய்வத்தன்மை பெற்றதற்கு அடைமொழி; அரங்கம் - உள்ளக்கிடக்கை Inner most core of beings 'புருஷ' என்ற சொல்லும் 'உள்ளே சயனித்துக் கொண்டிருப்பவன்' அரங்கன் அரங்கநாதன் என்ற பொருளில் வழங்கப்படுகிறது.) அகக் கண்ணால் சேவித்ததைப் புறக் கண்களாலும் தரிசித்து வழிபட அரங்கநாதன் திருக்கோயிலை அமைத்தனர். இக்கோயில் பிரகாரங்களும் ஏழு உலகங்களில் உள்ள அன்னமய - பிராணமய - மனோமய - விஞ்ஞானமய

ஆனந்தமய கோசங்களைக் குறிப்பவை.

**அர்ச்சாவதாரம்**

அடியார் விரும்பிய வடிவிலும பெயரிலும் கண்களுக்குத் தெரியும்படி கோயில்களிலும் இல்லங்களிலும் எளியவனாய் எழுந்தருளி நிற்கும் நிலை. சர்வ ஸ்வாதீனமாக சகல லோகங்களையும் அணுவிற்குள் அணுவாய் இருந்து அண்ட சராசரங்களை ஆட்டிப் படைக்கும் இறைவன் அர்ச்சாவதாரத்தில் பக்தனுக்குப் பராதீனன் (தன் விருப்பம் ஏதுமின்றி) ஆகிறான். இதனால் கோயில் வழிபாடு போற்றப்பட்டு, அர்ச்சாவதாரமே சிறப்புடையது என்று நம் ரிஷிகளால் உணரத தப்பட்டுள்ளது.

மேற்சொன்ன ஐநது இறை நிலைகளுள் அர்ச்சாவதாரத்தில் மட்டுமே எல்லா பக்தரும் சேவித்துப் பயன் பெறக்கூடும் என்பதைப் பிள்ளை லோகாசாரியார் தன் 'ஸ்ரீவசன பூஷண'த்தில் ஓர் அழகிய உவமையால விளக்கியுள்ளார்.

"ஆவரண ஜலம் (மேகம்) போல பரதத்துவம்; பாற்கடல் போலே வ்யூகம்; பெருக்காறு போலே விபவங்கள்; அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்; பூதத ஜலம் போலே அந்தர்யாமிதத்துவம்."

இமயம முதல் குமரி வரை நம் பாரத தேசத்தில் இத்த கையச்சிறப்புடைய அர்ச்சாவதாரத் திவ்ய மங்கள விக்கிரஹங்கள் கோயில் கொண்டு இருப்பினும், திருமலைக்கு மேலும் ஒரு பெருஞ்சிறப்பு உண்டு. நாடெங்கிலும் உள்ள கோயில்களில் அர்ச்சாவதார மூர்த்திகளில் சில ரிஷிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்டு வழிபடப்பட்டு வந்தவை; பல வேத வித்துக்களால் சம்ப்ரோக்ஷணை செய்யப்பட்டு வழிபட்டவை. தானே சாளக்ராம விக்கிரஹமாய் அவ்விறைவனே தோன்றிய சுயம்பு க்ஷேத்திரம் திருமலை.

விரும்பியவற்றை அடியாருக்கு விரும்பியவாறே அளிக்கும் முத்திரையுடன் - இடத்திருக்கையால் தொடையைத் தொட்டுக் கொண்டிருக்கும் அனுக்ரஹ முத்திரையுடன் நின்ற திருக் கோலத்தில் எழுந்தருளி இருக்கும் திருவேங்கட முடையானே அர்ச்சாவதாரத்துள்ளும், மேலும் மற்ற ஐந்து இறை நிலைகளுள்ளும் பெருஞ் சிறப்புடையவர்.

எல்லாச் சிறப்புகளும் பொருந்திய திருவேங்கடவனை வழிபடும் நெறிமுறைகளை ஸ்ரீராமானுஜர் 'திருமலை ஒழுகு' என்னும் அரிய நூலில் விவரித்துள்ளார். இவ்வழிபாட்டு முறைகளில் பல்வேறு சிறப்புக்கள் உள்ளன. அவற்றுள் சிலவற்றை மட்டும் விவரிப்போம்.

**சிகை மழித்தலின் மகிமை**

திருப்பதிக்குச் செல்வோருள் பலர் திருமொட்டை அடித்துக்கொள்ளுவது வழக்கமாகச செய்து கொள்ளும் பிரார்த்தனை. விவரிக்கமுடியாத மகிமை இப்பிரார்த்தனைக்கு உண்டு!

யாராவது ஒரு பக்தன் திருமலையில் தன் சிகையை மழித்துக் கொண்டால், அவனுடைய பூர்வ கர்மவினைப் பயன்களின் சாராம்சமாக ஒரு முடியைத் தன் திருமேனியில் (தலையில்) வளர்த்துக் கொள்கிறார் திருவேங்கடன் என்று ஓர் ஐதீகம். இதனால் அப்பக்தனை எல்லா ஆபத்துக்களிலிருந்தும் காகக ஒரு நுட்பத் தொடரபு வேங்கடவனுக்கு ஏற்படுகிறது. 'அச்யுத' என்றாலே 'பக்தர்களை நழுவவிடாதவன்' என்றும் ஒரு பொருள் கூறப்படுகிறது.

சிகை மழித்தால் திருவேங்கடவன் தம்மை எப்பொழுதும் காக்க ஓர் உறுதிப்பாடு ஏற்படுவதனால் பிறந்த குழந்தைகளுக்கு முதலில் திருமொட்டை திருமலையில் மழிப்பது பல குடும்பங்களில் பரம்பரை வழக்கமாக உள்ளது. இது ஒரு வகையில் சிறந்த சரணாகதி தத்துவம் போலவும் அமைகிறது.

இவ்வாறே அங்கப் பிரதக்ஷிணத்திற்கும் இறைவனிடம் முழுமையாகச் சரணடைந்து சரீர சுத்தி, மனச் சுத்தி பெறலாம் என்று கூறப்படுகிறது. வைகறை யாமத்தில முப்பத்து முக்கோடி தேவர்களும திருமலையானைச சேவிதது விடடுச்சென்ற சில நிமிடங்கள் உள் பிரகாரத்தில் தேவதைகளின் சஞ்சாரத்தால் தேஜஸ் நிறைந்து நிற்கும் பொழுது அஙகப் பிரதக்ஷிணம செயவது சிறப்பானதாகக் கருதபபடுகிறது. இதனால் 72000 நுணணுடல் நாடிகளிலும் அடைபபுகள் நீங்கி, மன வலிமையும், உடல் வலிமையும பெறலாம்

என்ற நம்பிக்கையும் நிலவி வருகிறது. இதற்கு ஈடாக வேறொரு பிரார்த்தனையும் இல்லை என்றும் பெரியோர்கள் கூறுவர.

இனி, திருவேங்கடவனின் திவ்யநாமஸ்தோத்திரங்களில் குறிப்பிடத்தக்கதாக, தொன்மையும் சிறப்பும மிக்க சகஸ்ர நாமம் பற்றிச் சில குறிப்புகள்:

கலியுகத்தில் வல்வினை தீர்க்கும் தெயவம் திருவேங்கடவனே ('கலௌ வேஙகட நாயக') என்று குறிப்பிட்ட நம் ரிஷிகள் மேலும் ஓர் உபாயத்தைச் சொல்லியுள்ளனர். 'கலௌ சங்கீர்த்ய கேசவம்' (கலியில் கேசவனின் ஆயிரம் நாமங்களைப் பாராயணம் செய்வதே உய்யும வழி, இம்மைக்கும் மறுமைக்கும்) என்று குறிப்பிட்டுள்ளனர்.

### ஸ்ரீவேங்கடேச சகஸ்ரநாமச் சிறப்பு

நம் வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள் ஆகியவற்றில் கூறப்பட்டுள்ள ஸ்ரீமன் நாராயணனின் சகல வைபவங்களும் ஸ்ரீவேங்கடேச சகஸ்ரநாமங்களில் தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளன. எல்லா அவதாரங்களும் விவரிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, ஸ்ரீகாயத்திரியின் அதிதேவதை 'ஸ்ரீமன் நாராயணன்' என்பதை நாமாவளியின் 450-ஆம் நாமம், "ஸவிதுர்வரேண்யாய பர்கஸே நம:" (வேத காயத்ரியின் உரை நடை அமைப்பு) என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

சில நாமங்களின ஆழ்ந்த பொருள் திருவேங்கடவனின் தனிச்சிறப்புகளை வெளிப்படுத்துகின்றன. இதற்கு ஒரு நல்ல உதாரணமாக அமைந்துள்ளது 10-ஆம் நாமம். 'அசேஷ பக்த துக்க ப்ரணசநாய நம:' என்பது அத்திவ்யநாமம். சேஷம் என்றால் மிச்சம், அல்லது மிகுதிவிடப்பட்டது. அசேஷம் என்றால் விடப்பட்டவை என்று ஒன்று கூட இல்லாமல எல்லாவற்றையும் குறிப்பது, 'அசேஷ பக்த துக்கப்பரணசநாய' என்றால் விடப்பட்டவை, தீர்க்க முடியாதவை என்ற குறைகள் ஏதுமின்றி, தன் பக்தனின் எல்லாத் துயரங்களையும் தகர்த்தெறிபவன் என்று பொருள. மிகவும் ஆழமான பொருள உடைய நாமம். இந்நாமத்தின் பொருளடங்கிய வேறு நாமங்கள் வேறெந்த சகஸ்ர நாமங்களிலோ (விஷ்ணு , சிவ, லலிதா ஸகஸ்ரம நாமங்களிலோ) வேறு மந்திர ஸ்தோத்திர நூல்களிலோ காணப்படுவதில்லை.

இனி, திருமலைப பிரசாதங்களின் மகிமையைப் பற்றிய சில அபூர்வ இரகசியங்களைப் பற்றி விவரிப்போம்.

தன் வினையால் தோன்றும் துன்பங்களையும் (கர்மஜம) காலதசையில் கிரகக் கூட்டங்களால் நேரும துயரங்களையும் (கிரகஜம்) தானே போக்கிக் கொள்ளக்கூடிய, ஆனால் அறியாமையால் இயலாத கஷ்ட நஷ்டங்களையும் (தோஷஜம) திருவேங்கடவன் போக்கி நல் வாழ்வளிக்கிறார் என்பது உலகப்பிரசித்தம. இவற்றுள் நொடிக்கு நொடி மாறும் கிரகங்களால் நேரிடும் இடர்பாடுகளை நீக்குவது திருவேங்கடவனின் பிரசாதங்களின் மகிமையே என்று அறியப்படுகிறது!

### வடையின் பிரபாவம்

திருமலைப் பிரசாதங்களில் வடையும், லட்டுவும் சிறப்பான பிரசாதங்கள். அவற்றுள் வடை மகிமை பேசற்கரியது. மாதா மாதம் பல லக்ஷக்கணக்கில் லட்டு வடைகள் மட்டுமே வினியோகிக்கப்படுகின்றன.

இதற்கு ஒரு காரணம் உண்டு.

கலியுகத்தில் இராகு, கேது என்னும் நிழல் கிரகங்களுக்கு உலக மக்கள் மேல் சக்தி பூரணமாக இருக்கும். இதனால் இராகுவும், கேதுவும 12 இராசிகளில் எங்கு அமர்ந்திருந்தாலும் 360 பாகைகளில் எந்தப் பாகையில் நின்றாலும கலியின் காரிருளை (ஏமாற்றும் இருளை)ப் பொழிவார்கள். இதன் பலன் நிலவுலகில் எந்தக் காரணத்திற்கு இருவர இணைந்தாலும் ஒருவர் ஏமாற வேண்டும் (இராகு தத்துவம்); மற்றொருவர் ஏமாற்ற வேண்டும் (கேது தத்துவம்); இதைத் தவிர இடைப்பட்ட நிலை ஒன்று ஏதுமில்லை.

### சில விளக்கங்கள்

கணவன் - மனைவி, தலைவன் - தொண்டன், முதலாளி - தொழிலாளி, ஆசிரியன மாணவன் என்று இரு பிரிவினர் இடையே ஒருவரை மற்றொருவர் ஏமாற்றியாக வேணடும். மனைவியைக் கணவனாவது ஏமாற்ற வேண்டும, கண

வனை மனைவியாவது ஏமாற்ற வேண்டும். முதலாளியாவது தொழிலாளியை ஏய்க்க வேண்டும்; தொழிலாளியாவது முதலாளியை ஏய்க்க வேண்டும். இது தான் வெங்கலியின் இருள் ஏமாற்றம் என்ற தடுக்க முடியாத கலிதோஷம்.

ஏமாற்றப்படுவோரின் குறைகளைக் களைய திருவேங்கடவன் அளிப்பது மாஷாரூபம் எனப்படும் உளுத்தம் வடை. இது இராகுப் பிரீதி காரகத்துவம் உடையது. நம்பி கடன் கொடுத்துவிட்டு, திரும்பிப் பெற இயலாத ஒருவன் திருமலைக்கு வந்தால் இந்த வடைப் பிரசாதம் பெறுவான். இதனால் தன்னை ஏமாற்றிச் கடன் பெற்றவனின் இரகசியங்கள் தெரிய வரும். தன் தீராதக் கடனைத் திரும்பிப் பெற வழி கண்டு கொள்ளுவான்.

இவ்வாறே ஒவ்வொரு பிரசாதத்திலும் ஓர் அரிய சக்தியுள்ளது. இவற்றையும் இங்கே விவரிக்க இயலாமையால் வடை மகிமை மட்டுமே இங்கே சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

திருமலைத் தேவனை மூன்று மாதங்கள் இந்திரியக்கட்டுப் பாட்டுடன் திருவாராதனம் செய்து, சஹஸ்ரநாம பாராயணங்கள் செய்தால் எல்லாத் துயரங்களும் நீங்கி, குபேர சம்பத்தைப் பெறலாம் என்று பிரம்மாண்ட புராணம் தெளிவுறுத்துகிறது. மேலும் ஸ்ரீவேங்கட நாராயணன் அப்பக்தனுடன் நேரில் பேசுவார் என்றும் கூறப்பட்டுள்ளது.

**"ஸர்வான் காமா ன வாப்நோதி**
**சாச்வதம் ச பதம் ததா**
**ஸத்யம் ஸத்யம் புனஸ் ஸத்யம்**
**ஸத்யம் ஸத்யம் ந சம்சய:"**

"பக்தன் விரும்பும் யாவும் பெறுவான். மேலும் அழிவற்றதான பரமபதமும் அடைவான். இவ்வார்த்தை உண்மை, உண்மை, மீண்டும் உண்மை, உண்மை - இதில் எவ்வித சந்தேகமும் இல்லை" என்று தேவரிஷியாகிய நாரதர் வஸிஷ்ட பிரஹ்ம ரிஷிக்கு ஐந்து முறை ஸத்தியம், ஸத்தியம் என்று சொல்லி மற்றும் இதில் சந்தேகமில்லை என்று உறுதிப்படுத்துகிறார்.



## பிரதோஷ காலம்

பிரதோஷகாலம் சூரிய அஸ்தமனத்தோடு ஆரம்பிக்கிறது.

பிரதோஷகாலம் பரமேஸ்வரனை தியானம் செய்ய உகந்த காலமாகும்.

பிரதோஷகாலத்தில் ஈஸ்வரன் எல்லாவற்றையும் தன்னிடம் அடக்கிக்கொள்வதால் வேறு ஒரு வஸ்து இல்லாத நேரம் அது.

பிரதோஷம் நித்தியப்பிரதோஷம், பக்ஷப்பிரதோஷம், மாதப்பிரதோஷம், மஹாப்பிரதோஷம், மற்றும் பிரளயப்பிரதோஷம் என ஐந்து வகைப்படும்.

அனுதினமும் சூரியன் மறைந்த மூன்று நாழிகைகள் முன்னம் நட்சத்திரங்கள் உதயமாகும் வரை உள்ள காலம் நித்யபிரதோஷம்.

சுக்லபக்ஷ சதுர்த்தி மாலைக்காலம், பக்ஷ பிரதோஷம் ஆகும்.

கிருஷ்ணபக்ஷ திரயோதசி மாதப்பிரதோஷம் ஆகும்.

மேற்கண்ட காலம் சனிக்கிழமை நேரிட்டால் அது உயர்ந்ததான மஹாபிரதோஷம் ஆகும்.

**தொகுப்பு பரிமளா ராமசாமி - சென்னை.**

# செய்திச் சுருக்கம்

## கோதாவரி புஷ்கரம்

இப்பாரதத்தில் பாய்ந்தோடும் பன்னிரண்டு ஜீவநதிகளுக்கு ஆண்டுக்கு ஒரு முறை அவ்வவ் நதிகளுக்குரிய ராசிகளில் குருபகவான் நுழையும் போது முதல் 12 நாட்களுக்கு ஒவ்வொரு நதியின் பெயரில் புஷ்கரம் எனும் புனல்விழா பெரிய அளவில் கொண்டாடப்படுகிறது. இதுபோது அந்நதிகளில் புனித நீராடுவதும், அந்நதிகளில் கரைகளுக்கருகே விளங்கும் புண்ணியத் தலங்களுக்கும், திருக்கோயில்களுக்கும் செல்வதும் மிகவும் புண்ணியச் செயலாகக் கருதப் படுகிறது. இவ்வகையில் சிம்மராசியில் குரு அடியெடுத்து வைப்பதால் அவ்ராசிக்குரிய கோதாவரி நதியின் 'புஷ்கர' விழா 14-8-91 முதல் ஒரு வருடத்திற்குக் கொண்டாடப்படுகிறது. குறிப்பாக முதல் 12 நாட்களான 14-8-91 முதல் 25-8-91 வரை மிகவும் புண்ணிய நாட்களாதக் கூறப்படுகிறது. இப்பெருவிழாவினை ஒட்டி கோதாவரி நதி அருகே உள்ள புண்ணியஸ்தலங்களும், கோயில்களும் முக்கியத்தும் பெறுகின்றன. இவ்வகையில் ராஜமந்திரி, கொவ்வூர், தவளேஸ்வரம், கோட்டிபல்லி ஆகிய இடங்கள் மிகவும் சிறப்புப் பெறுகின்றன. ராஜமகேந்திரபுரம் என்று ஒரு காலத்தில் புகழோடு அழைக்கப்பட்ட இன்றைய ராஜமந்திரி, கொவ்வூர் ஆகிய இடங்களில் தி.தி. தேவஸ்தானம் தன் ஆதரவில் சமய நிகழ்ச்சிகள் நடத்தியும் தற்காலிக அரும் பொருட்காட்சியகம், மாதிரி திருமலைக் கோயில் ஆகியன அமைத்தும் இப்புஷ்கர விழாவில் பெருமளவில் பங்கேற்றது. ராஜமந்திரி சுப்ரமண்ய மைதானத்தில் சுமார் ரூ. 4.5 இலட்சம் செலவில் மாதிரி திருமலைக்கோயில் ஒன்று தேவஸ்தானத்தாரால் கட்டப்பட்டது. இப்பன்னிரண்டு நாட்களின்போது யாத்திரிகப் பொதுமக்கள் கோதாவரி புனித நீராடி இக்கோயிலுக்கு வருகை புரிவதை ஒரு பேறாகக் கொண்டனர். இந்நாட்களின் போது இக்கோயிலின் உண்டி மூலம் வருமானம் ரூ. 2.9 இலட்சமாகும். புகழ்பெற்ற கலைஞர்கள் பங்கேற்ற வகையில் கொவ்வூரிலும், ராஜமந்திரியில் காலையிலிருந்து இரவு வரை ஹரிகதைச் சொற்பொழிவுகள், கர்நாடக இசைக் கச்சேரிகள், நாட்டிய நிகழ்ச்சிகள் போன்றவை நடைபெற்றன.

மேலும் தி.தி. தேவஸ்தானம் பிரசுரித்த சமயநூல் விற்பனை நிலையங்கள் மேற்கூறிய இடங்களில் திறக்கப் பட்டு இதுபோது ஐம்பது சதவிகிதம் தள்ளுபடி விலையில் ரூ. 3.5 இலட்சத்திற்கு நூல்கள் விற்கப்பட்டன. இப்புஷ்கரத்தின் போது கௌடியா மடம் சத்ய ஸேவா ஸமிதி, சுந்தர சைதன்யா, விஷ்வ ஹிந்து பரிஷத் ஆகிய சமயநிறுவனங்களைச் சார்ந்த தொண்டர்கள் சமூக சேவையினை மேற்கொண்டனர். மேலும் ஆந்திர மாநில முதல்வர் திரு. என். ஜனார்த்தன ரெட்டி, ஆளுநர் திரு. கிருஷ்ண காந்த் மற்றும் பல்வேறு துறைகளைச் சார்ந்த அமைச்சர்களும் உயர் அலுவலர்களும் இப்புஷ்கரத்தின் போது திருமலை மாதிரிக் கோயிலுக்கும் சமய நூல் விற்பனை நிலையங்களுக்கும் வருகை புரிந்து, இப்புனல் விழாவிற்குப் பெருமளவில் பொருளுதவி தந்தும் விழாவில் நேரடிப்பங்கினையும் மேற்கொண்ட தி.தி. தேவஸ்தான மேலாண்மையைப் பாராட்டினர்.

* * * *

## ஒரு நாள் வருமானம்

15-8-91 அன்று மட்டும் திருமலைக்கோயில் உண்டி மூலமாக பக்தர் ஒருவர் செலுத்திய ரூ. 27 இலட்சத்தினையும் சேர்த்து மேலாண்மைக்கு கிடைத்த வருமானம் ரூ. 30 இலட்சமாகும். இது ஒரு குறிப்பிடத்தகுந்த ஒரு நாள் வருமானமாகும்.

* * * *

## மற்றைய செய்திகள்

திருப்பதியில் தி.தி. தேவஸ்தானம் ஆதரவில் பார்வையற்றோர், முதியோர் , ஆதரவற்றோர் ஆகியோர்களின் நலனுக்காக இல்லங்களை அமைக்க

மேலாண்மை முடிவு செய்துள்ளது. இது சம்பந்தமாக தி.தி. தேவஸ்தான தணிக்கை மற்றும் கணக்கு உயர் அலுவலர் திரு. சேதுராமன், பாதுகாப்பு அலுவலர் திரு. வை.எஸ்.என். சர்மா ஆகியோர்களைத் தலைவர்களாகக் கொண்ட குழு ஒன்று அமைக்கப்படும். மேலும் கண் தானத்தை ஊக்குவிக்கும் வகையில் 'கண் வங்கி' ஒன்றும் விரைவில் அமைக்கப்படும்.

* * * *

திருப்பதியிலுள்ள திருமலா திருப்பதி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகோவிந்தராஜசுவாமி கோயிலின் உத்ஸவமூர்த்திக்கு ரூ. 10 கிலோ எடையுள்ள வெள்ளிக் கவசம் ஒன்று விரைவில் தயாரிக்கப்படும்.

* * * *

திருப்பதியை அடுத்துள்ள ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரர் திருக்கோயிலின் வாயிற்கோபுரத்தினை பழுதுபார்த்திட, அக்கோயில் மேலாண்மைக்கு வட்டியில்லாக் கடனாக ரூ. 15.2 இலட்சம் வழங்கப்படும். இத்தொகை 30 வருடங்களில் திருப்பிச் செலுத்தப்படும்.

* * * *

விரைவில் தலைநகரான டெல்லியில் தி.தி. தேவஸ்தானத்தார் திருமண மண்டபத்துடன் கூடிய தகவல் அறிவிப்பு மையம் ஒன்றினைக் கட்ட உள்ளனர்.

⁂

## சந்தாதாரர்களுக்கு...

31-10-91-ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும், விவரங்களுக்கும் 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

54, 58,60, 109, 190, 235,239, 358, 365, 367,403, 405, 406, 407, 409, 412, 413, 414, 416, 418ஏ,421, 428, 548, 564, 569, 570, 583, 584, 669, 709, 712, 740, 790, 792, 793 முதல் 795, 812, 814, 823, 831, 833, 1408, 1478, 1526, 1544, 1779, 1832, 1906, 1930, 1934, 1941, 1972, 1973, 1977, 1992, 2003, 2004, 2035, 2041, 2061, 2079, 2715, 3061, 3099, 3104, 3206, 3289, 3285, 3313, 3335, 3356, 3361, 3366, 3367, 3373, 3376, 3378, 3381, 3403, 3406, 3407, 3409, 3422, 3431, 3435, 3436, 3440, 3448, 3453, 3454, 3455, 3456, 3458, 3462, 3463, 3473, 3476, 3477, 3483, 3499, 3500, 3506, 3510, 3516, 3528, 3531, 3534, 3448, 3563, 3565, 3567, 3572, 3573, 3579, 4456, 4484, 4500, 4512, 4514, 4517, 4525, 4528, 4538, 4539, 4541, 4548, 4558, 4560, 4564, 4565, 4568,4571, 4577, 4582, 4595, 4599, 4602, 4613, 4622, 4627, 4635, 4637, 4646, 4649, 4654, 4657, 4660, 4665, 4671, முதல் 4675, 4677, 4678, 4680, 4692, 4695, 4698, 4702, 4704, 4721, 4723, 4724, 4739, 4742, 4748, 4753, 4755, 4757, 4758, 4764, 4765, 4769, 4771, 4777, 4782, 6110, 6112, 6114, 6116, 6121, 6127, 6133, 6135, 6143, 6147, 6148, 6149, 6150, 6157, 6159, 6176, 6182; 6183, 6188, 6189, 6190 6192, 6193, 6195, 6197, 6203, 6204, 6205, 6207, 6208, 6209, 6212, 6214, 6215, 6217, 6218, 6224, 6228, 6229, 6230, 6231, 6238, 6240, 6244, 6245 முதல் 6247, 6249, 6250, 6254,6275 முதல் 6277 6283, 6284, 6285, 6287, 6299, 6308 முதல் 6310, 6313, 6316, 6320, 6324, 6327, 6328, 6331, 6332, 6338, 6341, 6347 முதல் 6349, 6350, 6352, 6359, 6362, 6367, 6372, 6374, 6377, 6378, 6379, 6380 முதல் 6382, 6387, 6392, 6393, 6399, 6412, 6414, 6417, 6418, 6422, 6423, 6428, 6429, 6431, 6433, 6433-ஏ, 6435, 6436.

⁂

# நான்கு கடமைகள்

திரு. க. சுகுமாரன் - திருவாரூர்.

'கடமையைச் செய், பலனை எதிர்பாராதே' என்பது கீதையின் சாரம். இங்குக் கடமை என்றுச் சொல்லப்படுவது கர்மங்கள். அவை நான்கு எனக் குறிப்பிடுகிறது பகவத் கீதை. நாம் எதைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் சில கடமைகளை செய்தே ஆகவேண்டும். அவையாவன:

**நித்ய கர்மம்**

சுவர் இருந்தால்தான் சித்திரம் வரைய முடியும்? இந்த உடல் நல்லபடியாக நோயின்றி இருந்தால்தான் வாழ்க்கையானது மகிழ்ச்சிகரமாக இருக்கும். உடல் ஆரோக்கியமாக இருந்தால்தான் நமது மற்ற கடமைகளை ஒழுங்காக நிறைவேற்ற முடியும். நம் உடலை நல்ல ஆரோக்கியத்துடன் காத்து வைக்க வேண்டியது இன்றியமையாதது.

உண்பது, உறங்குவது, நீராடுவது என்பவைகள் உடலை ஆரோக்கியமாய் வைத்திருக்க நாம் செய்ய வேண்டிய கடமைகள். இவற்றை ஒழுங்காகச் செய்து கொள்ளாமல் போனால் உடல் என்ற சுவர் பழுதடைந்து விடும். அதன் பிறகு மற்ற கடமைகளை எப்படி நிறைவேற்ற முடியும்? செய்யாது போனால் பாபம் வந்து சேரும். பாபம் என்பது உடலின் ஆரோக்கியக்குறைவு என்பதைக் குறிக்கிறது.

**நைமித்திக கர்மம்**

இந்து மத சாஸ்திரங்களும், புராணங்களும், தத்துவங்களும் விஞ்ஞானத்துடன் இணைந்தன. வான மண்டல கிரகங்களின் தாக்குதலினால் ஒவ்வொரு மனிதனும் பல கஷ்ட நஷ்டங்களுக்கும், நன்மை தீமைகளுக்கும் ஆளாகிறான் என்பது அறிவு பூர்வமான உண்மை. இவற்றின் விளைவுகளிலிருந்து தப்பித்துக்கொள்ள சில கர்மங்களைச் செய்ய வேண்டியுள்ளது.

சிவராத்திரி, ஏகாதசி, திதி மற்றும் கிரகண வேளை போன்ற விசேஷ காலங்களில் செய்யப்படும் கடமைகளே நைமித்திக கர்மங்கள் எனப்படும். இவற்றையும் நாம் தவிர்க்கக் கூடாது.

**காமிய கர்மம்**

சில குறிப்பிட்ட பலனுக்காக செய்யப்படும கர்மங்கள் காமிய கர்மங்கள் எனப்படுகின்றன. சனிவிலகல், கெட்ட சங்கதிகளினால் வந்த துன்பங்கள் விலக, தேக ஆரோக்கியம் பெற சுற்றுப்புறச் சூழலில் மாசு அகல என்று குறிப்பிட்ட சில பலன்களை எதிர்பார்த்துச் செய்யப்படும் கர்மங்களைக் குறிக்கிறது. இவற்றைச் செய்தால் நன்மை உண்டு.

**நிஷித்த கர்மம்**

செய்யக்கூடாது என பகுத்தறிவு எச்சரிக்கும் எந்த காரியமும் மற்றவர்களுக்குத் துன்பம் தரக்கூடிய எந்தச் செயலும் நிஷித்த கர்மம். ஆசை, அகங்காரம் முதலியவற்றோடு செய்யப்படும் எல்லா காரியங்களும் நிஷித்த கர்மங்களாகும். இவற்றை மனிதரகள் அறவே செய்யலாகாது.

மேற்சொன்ன காரியங்களில் தினமும் கடைப்பிடித்து நடக்க வேண்டியதை நாம் பழகிக் கொள்வதோடு, சில குறிப்பிட்ட வேளைகளில் செய்யவேண்டிய கடமைகளைச் செய்ய நாம் பழக்கப் படுத்திக்கொண்டால் மனக்கட்டுப்பாடு தானே வந்தமைகிறது.

எந்த மனிதனிடம் மனக்கட்டுப்பாடு இருக்கிறதோ அவனிடம் ஒழுக்கமும், சுயக் கட்டுப்பாடும் வளர்கிறது.

குழந்தைகளுக்கு மனதைப் பற்றிச் சொல்லிக் கொடுத்தால் அவர்களுக்குப் புரிந்து கொள்வது கடினம். ஆனால் நித்திய கர்மங்களுக்கு அவர்களைப் பழக்கப்படுத்தி விட்டால் மனக்கட்டுப்பாடு அவர்களிடம் வளரத் துவங்கிவிடுகிறது. இதுவே அவர்கள் வளர்ந்து பெரியவர்கள் ஆனதும் சுய சிந்தனையும் ஒழுக்கமும் கூடிய கட்டுப்பாடான வாழ்விற்கு அவர்களைத் தயாராக்குகிறது. இப்படி வாழப் பழகும் மனிதர்கள் வாழ்வில் தான் வெற்றி அமைந்துள்ளது.

--ஆதாரம்:- 'பகவத் கீதை'



# திருவாடிப்பூர திருவிழா

ஆண்டாள் திருவாடிப் பூரத் திருவிழாவை முன்னிட்டு ஆகஸ்ட் 3,4 தேதிகளில் திருப்பதியில் சொற்பொழிவுகள் நடத்தப்பட்டன.

திருமலை திருப்பதி தேவஸ்தான ஆழ்வார் திவ்ய பிரபந்தச் செயல் திட்டத்தின் சார்பில் ஆகஸ்ட் 3-ம் தேதி சென்னையில் வாழ்ந்து வரும் டாக்டர் ஸ்ரீமதி ரங்கமணி சம்பத் அவர்கள் இயற்றிய ஸ்ரீமத் வெங்கடரமணீயம் என்ற நூலை ஸ்ரீஎம்.வி.எஸ். பிரஸாத், I.A.S. அவர்கள், (E.O., TTD.,) ஸ்ரீஅன்னமாசார்ய கலைக்கூடத்தில் வெளியிட்டார். மத்திய நிதி பெற்று அச்சிடப்பட்ட இந்நூலில் 108 திவ்ய தேசங்கள் பற்றிய பாடல்கள் வட மொழியிலும் தமிழிலும் இயற்றப்பெற்று அதற்கு ஆங்கிலத்திலும் விளக்கம் அமையப்பெற்றுள்ளது. முன்பாக Dr. R. சூர்யநாராயணமூர்த்தி அவர்கள், (P.R.O., TTD.) வரவேற்புரை நிகழ்த்தினார். புத்தகத்தின் பெருமையைச் சிறப்பு அலுவலர் Dr. M. வரதராஜன் எடுத்துச் சொன்னார்.



மக்கள் தொடர்பு அலுவலர் பேசுகையில்

ஸ்ரீபிரஸாத் அவர்கள் புத்தகத்தை வெளியிட்டு, டாக்டர் ஸ்ரீமதி ரங்கமணி சம்பத் அவர்களின் உழைப்பையும் பக்தியையும் பாராட்டிக் கௌரவித்தார். பின்னர் நூலாசிரியர் திருவேங்கடவன் விஷயமாக அமைத்த பாடல்களைப் பாடினார்.



செயலாட்சித்தலைவர் உரையாற்றுகையில்

இதன் தொடர்ச்சியாக, ஆண்டாள் உற்சவத்தை முன்னிட்டு, பேராசிரியர் S.B. ரகுநாதாசார்யார் (திருப்பதி) 'திருப்பாவை' என்ற பொருள் பற்றி உபந்யஸித்தார். ஸ்ரீ உ.வே.P.C. கோபாலாசார்ய ஸ்வாமி, ஓய்வு பெற்ற ஆசிரியர், S.V. Oriental College, 'கோதாதேவியின் உப



உப.வே.ஜே. சேஷாத்ரி சுவாமி உரையாற்றுகையில்

தேசம்' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார். ஆகஸ்ட் 4ம் தேதி, ஸ்ரீஉ.வே.J.சேஷாத்ரி ஸ்வாமி, ஆசிரியர், S.V. Oriental College பெரியாழ்வார் காட்டிய வைணவ தர்மத்தைப் பற்றியும் டாக்டர் J. முனிரத்னம், ஆசிரியர், தெலுங்குத் துறை, திருவேங்கடவன் பல்கலைக்கழகம், 'ஆண்டாளும் அன்னமய்யாவும்' என்ற பொருள் பற்றியும் பேசினர்.

ஆண்டாள் அவதரித்த ஸ்ரீவில்லிப்புத்தூரில் ஆகஸ்ட், 7, 8 தேதிகளில் சொற்பொழிவுகள் நடைபெற்றன. ஆகஸ்ட் 7ம் தேதி அன்று ஸ்ரீவில்லிப்புத்தூரிலுள்ள சக்ரத்தாழ்வார் சந்நிதி முன் மண்டபத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீவில்லிப்புத்தூர் மணவாளமாமுனிகள் ஸந்நிதி ஜீயர் ஸ்வாமி தலைமையில் சொற்பொழிவுகள் தொடங்கப்பெற்றன. ஜீயர் ஸ்வாமி மங்களாசாசனம் செய்த பின்னர், செயல்திட்ட உறுப்பினர் பேராசிரியர் பொன். சௌரிராஜன் அவர்கள் தொடக்கவுரையில் இச்செயல்திட்ட அமைப்பையும், இத்திட்டத்தின் செயல்களையும் எடுத்துச் சொன்னார். ஸ்ரீஉ.வே. அலங்காரம் தேவராஜ அய்யங்கார் ஸ்வாமி 'பாவை பாடிய பைங்கிளி' என்ற பொருள் பற்றியும் திருமால் ஆசிரியர் ஸ்ரீ உ.வே. குமாரவாடி சே. ராமாநுஜாசார்யஸ்வாமி, 'ஆழ்வாரும் அப்பனும்' என்ற பொருள் பற்றியும், ஸ்ரீஉ.வே. அரையர் ஸ்ரீநிவாச ரங்காசார்ய ஸ்வாமி, 'நம்மாழ்வாரும் திருவேங்கடமுடையானும்' என்ற பொருள் பற்றியும் உபந்யஸித்தனர். முடிவாக 'பெரியாழ்வார் பெண்பிள்ளை' என்ற தலைப்பில் டாக்டர் மா. வரதராஜன் உபந்யஸித்தார்.

இரண்டாம் நாளான ஆகஸ்ட் 8ம் தேதி, ஸ்ரீஉவே.K.A. தேவராஜன் ஸ்வாமி (சென்னை) 'அருளிச்செயல் ஏற்றம்' என்ற பொருள் பற்றியும் ஸ்ரீஉவே. அர்ச்சகம் அலங்காரம் ராஜகோபாலன் 'மனத்துக்கினியானின் மாண்பு' என்ற பொருள் பற்றியும் சொற்பொழிவாற்றினார். இறுதியாக ஸ்ரீமான் ஸ்ரீராமுலு தேசிகன் 'கோதை நாச்சியாரின் சிந்தனைகள்' என்ற தலைப்பில் பேச, சொற்பொழிவுகள் இனிதாக நிறைவுபெற்றன.

மதுரையில் அகிலபாரத ஸ்ரீவைஷ்ணவ மகாசபையின் உதவியால் ஸ்ரீகூடலழகர் சந்நிதியில் ஆகஸ்ட் 9ம் தேதி சொற்பொழிவுகள் நடத்தப்பட்



ஸ்ரீவில்லிப்புத்தூர் நிகழ்ச்சியில்




மதுரை நிகழ்ச்சியின் போது

டன. பேராசிரியர் P. சங்கரராஜுலு அவர்கள் தலைமை தாங்கி 'இலக்கிய நயமும் தத்துவ செறிவும்' என்ற பொருள் பற்றி பேசினார். மதுரைக் கல்லூரி பேராசிரியர் டாக்டர் R. அரங்கராஜன் அவர்கள் திருப்பல்லாண்டும் மங்களாசாசனமும் என்ற தலைப்பிலும், மதுரைக்கல்லூரி பேராசிரியர் பி. பொன்னப்பன் 'திருப்பாவையும் பாவை நோன்பும்' என்ற பொருள் பற்றியும் பேசினர். மேலும் ஸ்ரீ உ.வே. ஸ்ரீமத் ரங்கம் என். ராமஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி 'பெண்ணரசி ஆண்டாள்' என்ற தலைப்பிலும் பேராசிரியர் எம்.பி. ஸ்ரீனிவாசன், சிவகங்கை, 'பிள்ளைத் தமிழும் தாய்ப்பாசமும்' என்ற பொருள் பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

இறுதியாக, இரண்டு நாள் சொற்பொழிவுகள் (ஆகஸ்ட் 10, 11) ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாத பாதுகா வித்யாலயாவில் நடைபெற்றன. ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமிகள் இரண்டு நாளும் எழுந்தருளியிருந்து மங்களாசாசனம் செய்தார். முதல்நாளான ஆகஸ்ட் 10ம் தேதி, ஸ்ரீ உவே. எஸ். க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (சுதர்சன பத்திரிகை ஆசிரியர்) 'திருவாய்மொழியில் பரஸ்வரூபம்' பற்றியும் ஸ்ரீ உ.வே. ஸ்ரீரங்கம் எம். திருமலாசார்யஸ்வாமி 'ஆண்டாள் மேக விடுதூது' என்ற பொருள் பற்றியும் உபந்யஸித்தனர். பின்னர் ஸ்ரீ உ.வே. ஆர். நரசிம்மாசாரயஸ்வாமி 'முதலும் முடிவும்' என்ற தலைப்பிலும் டாக்டர் எம். வரதராஜன, திருப்பதி, 'மாறன் உகந்த முகில்வணணன்' என்ற பொருளபற்றியும் சொறபொழிவாற்றினர.

இரண்டாம் நாளான ஆகஸ்ட் 11ம் தேதி, ஜீயர் ஸ்வாமி தலைமையில ஸ்ரீ உ.வே. ஆர். சிங்கம்மய்யங்கார் ஸ்வாமி 'அடியார் குழாங்கள்' என்ற தலைப்பிலும், ஸ்ரீ ஆண்டவன ஆச்ரம ஸ்ரீகசார்யரான ஸ்ரீ உவே. ஆர். மாதவாசார்ய ஸ்வாமி, 'உனக்கே நாமாட் செய்வோம்' என்ற தலைப்பிலும், ஸ்ரீ உ.வே. டாக்டர் S.V. நரசிம்மாசார்யஸ்வாமி அகோபில மடத்து ஆஸ்தான வித்வான், 'ஆழ்வார்களின் பெண்மை அநுபவம்' என்ற தலைப்பில் உபந்யாஸித்தனர். இறுதியில் பேராசிரியர பொன். சௌரிராஜன் அவர்கள் முடிவுரை வழங்க, டாக்



ஸ்ரீரங்கம் நிகழ்ச்சியின் போது

டர் எம். வரதராஜன் நன்றியுரை நிகழ்த்த, விழா சிறப்பாக முடிவு பெற்றது.

தகவல்:

**டாக்டர் எம். வரதராஜன்**
சிறப்பு அலுவலர்
ஆழ்வார் திவ்யப்பிரபந்தச்
செயல்திட்டம், தி.தி.தே.,
திருப்பதி.



ஸ்ரீநாராயண ஜீயருடன் சிறப்பு அலுவலர்

### செய்தி

ஆழ்வார் திவ்ய பிரபந்தச் செயல்திட்டத்தின் சார்பில் திருவேங்கடவன் விஷயமாக ஒன்பது ஆழ்வார்களும் ஆண்டாளும் பாடிய 206 பாசுரங்களும், திருமலையில் காலை மாலை தோமாலை சேவைகளில் சேவிக்கப்படும் நித்யாநுஸந்தான பாசுரங்களும், ஐம்பது வருடத்துக்கும் மேலாக அருளிச்செயல் கோஷ்டியில் அந்வயித்து வருபவரும், தேவஸ்தான ஓரியண்டல் கலாசாலையில் ஓய்வு பெற்ற வியாகரண பேராசிரியருமான ஸ்ரீஉ.வே. திருமலை அனந்தாண் பிள்ளை கோபாலசார்ய ஸ்வாமி மூலமாக ஒலிப்பதிவு செய்து ஒலிப்பேழை வெளியிட ஏற்பாடாகியுள்ளன. இதன் தொடக்கவிழாவை ஜூலை 16ம் தேதி அன்று ஸ்ரீஎம். வி.எஸ். பிரஸாத் அவர்கள் I.A.S., Executive Officer, TTD. நடத்திவைத்தார். ஸ்ரீY.S.N. சர்மா, I.P.S., Chief Security Officer, TTD மற்றும் வித்யாபீடம் துணை வேந்தர் பேராசிரியர் என். எஸ். ராமாநுஜதாதாசார்யஸ்வாமியும் இதில் கலந்து கொண்டனர்.



(3-ம் பக்கத் தொடர்ச்சி)

டும் போது, அவன் மகிழ்ச்சியின் எல்லைக்கே சென்று விடுகிறான். குறுகிய எண்ணங்கள் மறைந்து பரந்த மனப்பான்மையும், பொதுநல நோக்கும், சமயப் பற்றும் மேலும் அவனுள் வளர்ந்திடும் போது பிரச்சனைகள் அவனுக்கு ஒரு பொருட்டாக அமையா என்பது உறுதி.

ஆம், இத்தகு அரிய வாய்ப்பினைத்தான் ஆண்டாண்டு காலமாக திருமலையில் கோயில் கொண்டிருக்கும் வேங்கடவன் திருக்கோயில் நாளும் அளித்துக் கொண்டிருக்கின்றது. திருமலை நாளும் விழாக்கோலம் பூண்டாலும், ஒவ்வோரு ஆண்டும் நடைபெறும் 'பிரம்மோத்ஸவம்' எனும் பெருவிழாவிற்கு ஈடு இணை ஏதுமில்லை என்றே கூறவேண்டும். ஒன்பது நாட்கள் நடைபெறும் இவ்விழாவின் போது, விலை உயர்ந்த ஆபரணங்களை அணிந்த கோயில் உத்ஸவர் தன் தேவியருடன், பல வண்ண மலர்களால் அலங்கரிக்கப்பட்ட வாகனங்களில் காலையிலும் இரவிலும் குறிப்பாக கருடாழ்வார் மீதும், திருத்தேர் மீதும் திருமலை மாடவீதிகளை பவனி வரும் காட்சியும், இதுபோது திருமலை முழுவதும் வண்ணவிளக்குகளாலும், வண்ண மலர்களாலும் அலங்கரிக்கப்பட்டு திரேதாயுகத்து அயோத்தியோ - துவாபரயுகத்து மதுராபுரியோ என்று வியக்குமளவு திகழும் திருமலைக் காட்சியும் 'மண்ணில் வைகுந்த்'மாக திருமலையினை மாற்றிவிடும். இதுபோது திருமலைக்கு வருகை புரிந்து நெடியோனை தரிசித்தல் என்பது வாழ்க்கையில் கிடைக்கும் அரிய வாய்ப்பாகும். ஆகவே இம்மாதம் 12-ஆம் தேதி முதல் 20-ஆம் தேதி வரை ஒன்பது நாட்கள் நடைபெறும் பிரம்மோத்ஸவத்திற்கு உற்றார் உறவினருடன் திருமலைக்கு வருகை புரிந்து அவனருள் பெற்று அரிய அருள் அனுபவம் பெறவே விழைகின்றோம்.

Edited and Published on behalf of the T T Devasthanams by K. Subba Rao, M A, and printed at T.T D Press by M. Vijayakumar Reddy, Manager, T.T D Press, Tirupati-517 507

Regd. No. H/TRP/12 வருடச் சந்தா ரூ. 12

# SRIVARI NAVARATHRI BRAHMOTSAVAM
## AT TIRUMALA
## FROM OCTOBER 9 TO 17, 1991

According to Bhavishyottara purana, Brahmotsavam was established by Brahma himself to propitiate the Lord of the Seven Hills.

This festival celebrated for nine days, is a sublime and spectacular occasion. The Devas themselves, it is declared, come down to the earth to witness the fabulous festival and offer worship to the Lord.

During this solemn occasion the holy hills reverberate with the vibrant chant of holy mantras, the blissful songs of the devotees and the deeply moving spiritual discourses by holy men. Eminent national artistes participate in music concerts. The brilliantly illuminated Holy Hills present a dazzling and spectacular scene to the devotees. The processional deities taken out around the shrine along the main streets on lavishly decorated vahanas enthrall the pilgrims.



**The important days of the festival are:**

| | |
|---|---|
| **Garudaseva** | **... October 13** |
| **Silver Car** | **... October 16** |
| **Chakrasnanam** | **... October 17** |

Devotees are earnestly invited to experience the ecstatic divine presence on the hoary holy hills and get the blessings of Lord Sreenivasa.

M.V.S. PRASAD, I.A.S

*Executive Officer.*